உ

கடவுள் துணை.

# இகபர
# ஞானசாரத்திரட்டு.

## முதற்பாகம்.

இஃது
இகபரானந்தர்களுக்கு
உபயோகமாகும்பொருட்டு
ஏட்டுப்பிரதிகளிலிருந்தும்
அச்சுப்பிரதிகளிலிருந்தும்
சிலவித்வான்களால் தொகுக்கப்பட்டு,
நேத்திர ராஜ பண்டிதராகிய
ஷட்பாஷை வித்வான்
ஸ்ரீமான்,
க. நாராயண ப்ரஸாத் அவர்கள்
மாணாக்கர்
மு. பார்த்தசாரதி முதலியாரால்,

சென்னை
ஆனந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1906.

*Registered Copyright.*

விலை அணா - அ.] [Price 8 As.

1279

IMS 0034

விவேகானந்த புத்தகசாலை
ஹிந்து மதாபிமான சங்கம்
இ - 12.

கடவுள் துணை.

# இகபர ஞானசாரத்திரட்டு.

## முதற்பாகம்.

இஃது
இகபரானந்தர்களுக்கு
உபயோகமாகும்பொருட்டு
ஏட்டுப்பிரதிகளிலிருந்தும்
அச்சுப்பிரதிகளிலிருந்தும்
சிலவித்வான்களால் தொகுக்கப்பட்டு,
நேத்திர ராஜ பண்டிதராகிய
ஷட்பாஷை வித்வான்
ஸ்ரீமான்,
**க. நாராயண ப்ரஸாத் அவர்கள்**
மாணக்கர்
மு. பார்த்தசாரதி முதலியாரால்,

சென்னை
ஆனந்த அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1906.

*Copyright Reserved.*

விலை அணா - அ.] [Price 8 As.

இ. 12.

உ

இகபர

# ஞானசாரத்திரட்டு.

முப்பிரிவுகளின் முடிந்தபொருளும்

முகவுரையும்.

---

శ్లో॥ శుక్లాంబరధరంవిష్ణుం శశివర్ణంచతుర్భుజమ్।
ప్రసన్నవదనంధ్యాయే త్సర్వవిఘ్నోపశాంతయే॥

## காப்பு.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு ளுடு.

## அவையடக்கம்.

### ஆசிரிய விருத்தம்.

நற்பொரு ளிலக்கண விலக்கிய மெனும்பெரிய
நரலைமுழு துங்குடித்து
நாடெலாம் பொழியவரு கவிமுகி லெனக்கமல
நாமகள் கடாக்ஷமேவும்
பற்பல கவிச்சக்ர வர்த்திகளின் மெய்ப்புகழ்
பரந்தசமு கத்திலேகிப்
பாவினச் சீர்நிறைக ளறியாத நாயினேன்
பன்னுமென் செய்யுளியலை
விற்பன விவேகியர்க ளொப்பிச் சபாஷென
விளம்புவர்க ளென்று தேர்ந்து
மேதினி மதிக்குமொரு ஞானநூ லினிபுகல
மேன்மைபெறு மதுரைதனில்வாழ்

சற்ப்ரபல ஸத்சுகிர்த ஸத்புருஷ ஸத்விஷய
ஸமரஸ சுபாவயோக
சத்திய தயாநிலய சத்திசிவ தமதுபய
தாள்பணிந் தனன்மகிழ்ந்தே.

**வெண்பா.**

நாப்பழக்க மில்லே னனிநாப் பழக்கமுற்றோர்
மாப்பழக்கத் தாற்பாட வாய்திறந்தேன்—யாப்பமுத்தம்
இன்சொலிலே யேனு மிளங்கிள்ளை சொற்போலென்
புன்சொலையுங் கொள்வீர் பொறுத்து.

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சாலவென் னறிவாலொன்றுஞ் சாற்றவு மில்லை முன்னாள்
தாலமே லவர்சொன் ஞான சாரத்தை யெடுத்திழைத்து
சீலமார் பொருள்கண் டோர்ந்து ஜகத்தவ ருஜ்ஜீவிக்கக்
கோலமாய்த் தொகுத்தநூலின் குணமதைக் கொள்வர்தாமே.

## கல்விப்பொருட் சிறப்பு.

புனைவுறுங் கல்வியாம் பொருளைப் படைத்திடிற்
புவனமெல் லாந்துதிக்கும்
பொன்போல வேறொருவர் கைதனி லடங்காது
போற்றிப் புதைக்கொணாது

வினைமருவு திருடருங் காணமலேபெற
விரும்பப் படாத செல்வம்
மிக்கநய மதுரமொடு கவிமாரி பொழிகின்ற
மேகசஞ் சாரமிதனை

மனையிலொரு வர்க்கொருவர் செலவிடக் கூடாது
மனமாளி கைப்பெட்டியில்
வைக்கின்ற மாமணிகள் மற்றொருவ ரிச்சித்து
வௌவப் படாது கண்டாய்

கனமருவு வெண்கமலை நாமகள் விலாசமுறு
கல்விச் சிறப்பல்லவோ
கஞ்சனிகர் நற்ருச ரஞ்சலிசெய் மெய்த்தேச
கஞ்சகிரி சித்தேசனே.



# முகவுரை.

வண்ணம்—நாதநாமக்கிரியை — ஆதிதாளம்.

శ్లో॥ భజగోవిందం భజగోవిందం భజగోవిందంమూఢమతే ।

సంప్రాప్తే సన్నిహితే కాలే నహినహిరక్షతిడుకృఞ్కరణే ॥

பஜகோவிந்தம் பஜகோவிந்தம பஜகோவிந்தம் மூடமதே,
ஸம்ப்ராப்தேஸன் னிஹிதேகாலே நஹினஹிரக்ஷதி
டுக்ருக்கரணே॥

அகத்திசரோ டறப்பளிசர் அகப்பைசித்தரு மழுகணிசித்தர், அந்தகக்கவி வீரராகவ னருணகிரியந் தாதியோடுடன், அங்காதிபாத சுகரணவாத அங்கலக்ஷண மமர்ந்த நூற்களும், ஆத்திசூடியொடு ஆள்வாராதிக ளோதியநூலுட னுறுசத்திரம், இராமசந்த்ரகவி ராஜபாலரோடு இடைகாட்டாரும் ராமதேவராம், உலகநீதியொடு ரோமரிஷியுமவ ருரைத்தஞானம்,ஒட்டகூத்தரும் ஔவையாருமே யருளிய நூற்களை (பஜ) வால்மீகரொடு வசிட்டமுனிவரும் வாலேக்கும்மியு வாக்குண்டானும், வாகடசாஸ்திர வானசாத்திரம் வெற்றிவேற்கையொடு வெட்டவெளிச்சர், வீரப்பிரம்ஹரும் வேமன்னருமே ஓதியநூலுட னெற்றநூற்களாங், கலிங்கபருணன் கபிலசித்தரொடு கஞ்சகிரிசன்,கம்பராயனொடு கடுவெளிசித்தர்க் கன்னிசித்தருங் கருவூராருங், கர்ப்பிணிநூலர்க் கருணைக்கிசைந்த கயிலங்கிரியன் காளமேகரொடு குதம்பைசித்தர், குமரேசகருங் குணங்குடிமஸ்தான் கொன்றை வேந்தனுங் கொங்கணசித்தர்க், கோரக்கருமே கௌதமமுனியொடு சட்டமுனிவருஞ் சாற்றியநூற்களை (பஜ)

சவ்வாதுபுலவர் சாமுத்ரேகர் சிற்பி சாஸ்திரி சிவவாக்கியருடன், சிவப்பிரகாசர் சிவானந்தராம் சுப்ரமணியருரை ஞானசுருதியுஞ் சுமதிசதகருடன்சூக்ஷமநூற்களாஞ், சொக்கநாதகவிராஜபுலவரொடு ஞானரத்னகுற வஞ்சிநூற்களுஞ், ஞானவெட்டியொடு ஞானவாசிட்டம், நந்திஸ்வரரும் நரஸிம்ஹருமே நமச்சிவாயகுரு ராஜபுலவரொடு, நல்வழி நன்னெறி நீதிநெறியுடன் நீதிசாரமும் நிஜானந்தரொடு நெஞ்சறிவிளக்கம் நள வெண்பாவொடு நயனசாத்திரம் நாரதரோதிய நிதநாதசங் கீத நூலுடன் (பஜ)

பட்டணத்து மெய்ஞ் ஞானிபிள்ளையொடு பதஞ்சலீசர் பாம் பாட்டியுமே, பாரிலுயர்ந்தது பிரம்மரிஷிகளுரை பகவத்கீதை புலிப்பாணியும் புண்ணுக்கீசர், புலத்தியருடனே புறந்தரதாசர் போககாதரும்பொய்யாமொழிகவி ராஜபுலவர்மனுநீதிகாதலொடு, மதுரகவியரும் மச்சமுனிவரொடு மார்க்கண்டேயர், மூதுரை முதுமொழி தன்வந்த்ரியுமொடு தாயுமானவர், திருவள்ளுவரெனுந் தேவர்க்குறளாந் திருநான்மறையும் மூவர்தமிழுடன் முனி மொழி சொல்லுந் திருமூலரொடு திரிகடுகருமே திருத்தாண்டகந் திருவாசகமும் மொருவாசகமென (பஜ)

கோவைகிரந்தமொடு தமிழ்த்தெலுங்குடன் தெவிட்டாமொ ழிகளை புகட்டியூட்டசீ, ரிகபரஞான சாரதிரட்டென முப்பிரிநூல து திரியிலுரித்து முதற்சாற்றிய நூலிதை,பாவலர் நாவலர் பண் டிதர் கண்டவர் கொண்டுமகிழ்ந்தனர் கவியுரையாதொரு காரண மேதெனில், கைக்கனிபோலொரு மெய்க்கனியாய்பல பெரியோ ருரையென பற்பலர் கூறிட, பாரினில்யாவரும் நற்குறிபோலொரு சொற்குறியாலிதை கொண்டுகளிப்பவர் கோடாகோடி, கண்டு தெளிந்துங் காணுர் கோடி, காணுக்கண்டவ ரவரொருகோடி, கதறி மடிந்தரை செப்பிடகோடி (பஜ)

பொங்கும் கடல்தனி லாழ்ந்தினர்கோடி, அங்கு மிங்குமென நாடினர்கோடி, தும்புதர் நாரதர் வீணைகள்பாடி,நம்பியொன்றை சிலர் மகிழ்வார் கோடி, தெண்டிரை பெரிதென தெவிட்டார் கோடி, உண்டதை கண்டென வென்பார் கோடி, வாழ்வே பெரி தென வழக்கினர் கோடி,தாழ்வே பெரிதென தாண்டினர் கோடி, குருவே நமக்கென குண்ணினர்கோடி, அறிவே நமக்கென ஆய்ந் தார் கோடி,விதியே மதியென யுரைத்தவர் கோடி,மதியே விதி யென அவரொருகோடி, விதிமதி யறிவென தெறிந்தவர்கோடி, மதிவிதி ரெண்டையு மறியார்கோடி, அறிந்தவர் புவிதனில் செப் பார் நாடி, தெரிந்தவர் போல்சிலர் மெப்புவர் பாடி, பரிந்தவர் போல்சில ரெரிந்தவர் கோடி, எரிந்தவர் போல்சிலர் பரிந்தவர் கோடி, (பஜ) இருந்துமாண்டவர் கோடாகோடி, மாண்டுமிருப்பவ ரவரொருகோடி,தொட்டுவிட்டவர் செப்பிட கோடி,சுட்டுகெட்டவர்

கோடாகோடி, முத்திமுத்தியென பித்தனர்கோடி, கத்தி கத்தி தினஞ் செத்தனர்கோடி, வேதமறிந்தவர் பொய்யார்பாடி வாத மறிந்தவர் மெய்யார்கூடி, வல்லரைவென்றவர் சொல்லவுங்கோடி புல்லரைவெல்லா வல்லவர் கோடி, நல்லவருலகினில் காணூர்தேடி பொல்லரைசொல்லவுங் கோடாகோடி,பாரினில் மானிட தோலையு மூடி, நாரிகளெனுஞ்சில பேய்களைகூடி, ரம்புவர்கோடி நம்பார் கோடி, வம்புகள் செய்திதை பழிப்பார் கோடி, சம்போசங்கர வென்றவர்கூடி, தெம்புடனே பதமடைவோர் கோடி (பஜ)

## நாரத சுவாமிகள்

## மார்க்கண்டேயருக்கு விபூதிமஹிமையை

## யுபதேசித்தல்.

வெண்ணீறு சாற்றினு லெவ்வினையகன்றிடும்,வேதமுஞ் சித்தி வெகு செல்வமுண்டாம்—எண்ணிலா ருத்ராக்க மிலகுநீறணிந்த பேர், யிருநான்கு திசையுட னிருந்து வாழ்வார்—நன்னியே திருநீறு நன்மையாய் பூண்டபேர், நமனை வென்றிடுமொழிகள் நவிலதாகும்—உன்னியே திருநீறை யுண்மையாய் பூண்டபே ருடன் கூடி சிவனுமையை யூடாடுவர்=சுந்தரவிபூதியை யணிந்த பேர்க்கு ஜெனன மில்லை, இந்தவிபூதி மகத்துவமதை யியம்பக்கேட்க, அந்திவண்ணன் பூசையினு மதிகமாகும், முந்திய தவத்தினி லுயர்ந்த முனிமார்க் கண்டனூரே.

## இகபர ஞானசாரத்திரட்டின்,

மூடிந்தபொருளும் முகவுரையும்

முற்றிற்று.

---

# பிழை திருத்தம்.

| பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 2 | யாப்பழத்தம். | யாப்பழுத்தம். |
| 9 | 3 | ஜெகத்தவ. | ஜகத்தவ. |
| 21 | 3 | கட்டார். | காட்டார். |
| 38 | 3 | பரிபானஞ். | பரிபாலனஞ். |
| 42 | 5 | தபசிகனே. | தபசிகளோ. |
| 47 | 9 | மெயத்தேச. | மெய்த்தேச. |
| 48 | 7 | மிவைக்ண். | மிவைகண். |
| 63 | 2 | திறழ்கச்சி. | திகழ்கச்சி. |
| 31 | 11 | விடமதினிலோ. | விடமதனிலோ. |
| 84 | 9 | மங்கைமமகிழ். | மங்கைமகிழ். |
| 169 | 4 | அருட்டருத்த. | அருட்டரித்த. |
| 276 | 4 | பேறவீர். | பெறவீர். |
| 282 | 8 | ணெண்ணமிது. | னெண்ணமிது. |
| 122 | 1 | குராளுங். | குறளுங். |
| 41 | 5 | பிர்மரிஷி. | பிரமரிஷி. |
| 373 | 8 | கொழம்புகளு. | கொழம்புகளுடனே |
| 378 | 13 | சிறுபையுங். | சிறுமையுங். |
| 10 | 2 | காங்க. | காகங்க. |

உ

கடவுள் துணை.

# இகபர ஞானசாரத்திரட்டு.

## முதற்பாகம்

---

### பொதுவணக்கம்.

#### அறுசீரடி விருத்தம்.

சத்தியுஞ் சிவமுமாகிச் சடாதரப் பொருளுமாகி
முத்திய தளிக்குஞான மூர்த்தியுந் தானுமாகி
சத்தினுட் சித்தாய்த்தோன்றிச் சதாசிவமாகி நின்ற
சுத்தனை தன்யமான சுயம்புவை வணக்கஞ் செய்வாம். 1

#### நேரிசை வெண்பா.

செம்பொருளு மோங்கச் சிறந்த கல்விதானோங்க
நம்பிநிதம் போற்றிடவாழ் நாளோங்க—தும்பிமுக
வைந்துகர மும்மதத்தா னன்பர்க் கருள்புரியுஞ்
சுந்தர விக்னேசன் துணை. 2

#### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நித்தியமில்லா விந்த நீணில மாந்தரெல்லாம்
முத்தியை யடைதற்கேற்ற முதன்வழி யாகுஞான
வித்தினை யடைந்தேயுய்யு மெய்ம்மையை விளங்கச்சொல்ல
அத்திமா முகத்தோன் நம்பி யறுமுகனடி காப்பாமே. 3

## மெய்ப்புதல். எண்சீரடி. விருத்தம்.

இத்தரையில் மானிடமென் றுருவு கொண்டோ
 ரின்னிலத்தின் மருமமதைத் தெளிவாய்க் காண
முத்திபெற்ற முன்னோர்க ளமைத்த நூலின்
 மொழிகளனுக் தவராது முன்னேன் சாக்ஷி
சத்திசிவ மாலுடனுங் குகனுஞ் சாக்ஷி
 சர்வவுயிர் தாம்படைக்கும் பிரமன் சாக்ஷி
எத்திசையோர்க் கெண்ணெழுத்தா லறிவையூட்டு
 மெய்த்தாயாங் கலைவாணி சாக்ஷியாமே. 4

## நூல் வணக்கம்.

அருள்சுரந்த நாதாக்க ளறி வுள்ளோர்க
 ளம்பலமாம் பூரணத்தி னொளி கண்டோர்கள்
தெருள்சுரந்த சிவத்தோடே சிவமாய் நின்ற
 சித்தரெல்லாம் வல்லஜீவன் முத்த ராேனார்
மருள் துறந்து ளமுதமழை பொழி யுமாபோல்
 மண்ணுலகின் ஜீவான்ம கோடிகட்கு
பொருள்சுரந்து ஞானவரை விளங்கிமேவப்
 போதித்த நூலிதனைப் போற்றி போற்றி. 5

## சிவ வாக்கியம்.

### ஜெகத்தடக்கம்.

கரியதோர் முகத்தையுற்ற கற்பகத்தைக் கைதொழக்
கலைகள் நூல்கள் ஞானமுங் கருத்தில் வந்துதிக்கவே
பெரியபேர்கள் சிறியபேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்
பேயனுகி யோதிடும் பிழைபொறுக்க வேண்டுமே. 6

### அவையடக்கம். வெண்பா.

நாப்பழக்க மில்லை னனிநாப் பழக்கமுற்றோர்
மாப்பழக்கத் தாற்பாட வாய்திறந்தேன்—யாப்பழத்தம்.
இன்சொலில்லையெனு மிளங்கிள்ளை சொற் போலென்
புன்சொலையுங் கொள்வீர் பொறுத்து. 7

காணுமல் வேணதெல்லாங் கத்தலாங் கற்றோர்முன்
கோணுமல் வாய்திறக்கக் கூடாதே—நாணுமல்
பேச்சுப்பேச் சென்னும் பெரும்பூனை வந்தக்கால்
கீச்சுக்கீச் சென்னுங் கிளி. 8

## அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சாலவென் னறிவாலொன் றுஞ் சாற்றவு மில்லைமுன்னுள்
தாலமே லவர்சொன் ஞானசாரத்தை யெடுத்திழைத்து
சீலமார் பொருள்கண்டோர்ந்து ஜெகத்தவ ருஜ்ஜீவிக்கக்
கோலமாய்த் தொகுத்தநூலின் குணமதைக் கொள்வர்தாமே. 9

## நற்புலவர் தீப்புலவர் செயல்.

மிக்கான சோலையிற் குயில்சென்று மாங்கனி விருப்பமொடு தேடிநாடும், மிடைகருங் காங்கன்ளக்கனி யிருந்தாலும் வேப்பங் கனிக்கு நாடும்—எக்காலும் வரிவண்டு பங்கே ருகத்தினி லிருக்கின்ற தேனைநாடும், எத்தனை சுகந்தவகை யுற்றாலு முருள்வண்டினங் துர்மலத்தை நாடும்—தக்கோர் பொருட்சுவை நயங்களெங்கே யென்று தாம்பார்த் துகந்து கொள்வார், தாழ்வான வன்கண்ணர் குற்றமெங்கே யென்று தமிழிலாராய்வர் கண்டாய்—மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர் வள்ளியுந் தழுவுதலைவா, மயிமேலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 10

## நூல்.

### கலிநிலைத்துறை.

வேதநூல் பிராயம்நூறு மனிதர்தாம் புகுவரேனும்
பாதியு முறங்கிப்போகும் நின்றதில் பதினையாண்டு
பேதைபா லகனதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவிவேண்டே னரங்கமா நகருளானே. 11

## பிறப்புகள்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன், எம்பெருமான் ! 12

## அறிவு கூறுதல்.

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு கல்லுண்டு மரமுமுண்டு, மனிதரினு நீர்வாழுஞ் சாதியுண் டனேககுல மனிதருண்டு, மனிதரினு மனிதருண்டு வானவரு மனிதராய் வருவதுண்டு, மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே யருமையென வகுத்தார் முன்னோர். 13

## நிலமண்டல வாசிரியப்பா.

அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மானிட ராத லரிது
மானிட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நாயத்த லரிது
ஞானமுங் கல்வியு நயந்த காலையும்
தானமுந் தவமுந் தான்செய லரிது
தானமுந் தவமுந் தான் செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே. 14

## ஞானச்சுருக்கம்.

அறிவே தாந்தம் அறிதல் சரியை
அறிவு சிவமென் றறிதல் கிரியை
அறிவுட னொன்று அனுபவம் யோகம்
அறிவோ டறிவா யானது ஞானமே 15

## ஞானக்கும்மி.

ஒப்ப உரையது செப்பாது மறை
தப்பா துன்னுரை யொப்பாது
செப்பிய நூலுக்குக் கப்பிய போர்வையை
யிப்பியே பாரடி ஞானப் பெண்ணே. 16

## மோக்ஷசாதன விளக்கம்.

### வெண்பா.

கூரார் விவேகமெனுங் கோடரியா லஞ்ஞானக்
காராருங் காட்டைக் களைந்தெடுத்துச்—சீர்ஞான
தீபங்கைக் கொண்டாற் றிகழ்முத்தி தோன்றுமன்றே
தாபமறு மானிடரே தான். 17

## பயன்படாவெண்ணம்.

வாளைமீ னுள்ள றலைப்படலு மாளல்லான்
செல்வக் குடியுட் பிறத்தலும்—பல்லவையு
ளஞ்சுவான் கற்ற வருநூலு மிம்மூன்றுந்
துஞ்சுமன் கண்ட கனா. 18

(போ - ரை.) ஊமை கனாக்கண்டால் அதை அவன் பிறர்க்குச் சொல்லிப் பயன்படுத்தமாட்டான்; அதுபோல், உள்ளான் என்னும் ஒரு சிறிய பறவை வாளைமீனைத் தூக்குதலும், சாமர்த்தியமில்லாதவன் செல்வக்குடியிற் பிறந்து அதைக் காப்பாற்றலும், சபைக்கு அஞ்சுகிறவன் படித்த படிப்பும் பயன்படாதகாரியம். இதைப்போலவே தனக்குத் தகாத முயற்சிகள் பயன்படாதகாரியமென்றறியலாம்.

## சிறியோர் தன்மை.

ஊனுண் டுயிர்கட் கருளுடையே னென்பானுந்
தானுடன் பாடின்றி வினையாக்கு—மென்பானுங்
காமுறு வேள்வியிற் கொல்வானு மிம்மூவர்
தாம்றிவர் தாங்கண்ட வாறு. 19

(பொ - ரை.) உயிரைக் கொன்று தின்றுகொண்டே தனக்கு இரக்க முண்டென்று பாவிப்பதும், எல்லாம் விதியினால் வருகிறதென்று சொல்லித் தான் சோம்பி யிருக்கிறதும், இம்மைப் பயனுக்காகச் சில சடங்குசெய்து ஜீவனைக் கொல்வதும் சாஸ்திரங்களின் சாரமறியாதவருடைய செய்கை யென்பது கருத்து.

(வி - ரை.) புலை, கொலை, களவு, கட், காமம், பொய், சினம், வஞ்சகம், பொறாமை முதலியத் தீக்குணங்களை விலக்கி மானிட மார்க்கத்தைத் தெரிந்துகொள்ளக் கூடாத அந்தகர்களைத்தான் அறியாதவர்களென்று சொல்லப்படுமாகையால் மூதறிவில்லா மூத்தோர்களாயினுஞ் சிறியோரினத்தைச் சாருவராம்.

## பெரியோர் தண்மை.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மனமெனு மகந்தைநீக்கி மாற்றிலா வின்பவீட்டிற்
சினமதை கழித்துமேலாந் தேசிக னருளைப்பெற்று
அனலதாங் கானலேற்றி யடைபொரு ளிதுவேயென்று
தனையகன் றிருப்பரெல்லாந் தரணியில் மேல்வராமே. 20

## இதுவுமது.

காமமா திகள் வந்தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்றூர்
தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார்
பாமர ரெனக்காண் பிப்பார் பண்டிதத் திறமை கட்டார்
ஊமரு மாவா ருள்ளத் துவகையாஞ் சிவன் முத்தர். 21

## தொண்டர் தண்மை.

மூலமாம் வாசியேறி மூதறி விளங்கக் கண்ட
பாலருஞ் சீலராகிப் பதி பசு பாசமூன்றுஞ்
சாலவன் னினைவு நீக்கிச் சயரலை நீக்கிநின்ற
மேலமே பொருளதாகக் கொண்டவர் தொண்டராமே. 22

## ஆத்ம லாபம்.

### ஆசிரிய விருத்தம்.

மமதை யெனு முதுதரிச தாணவ மதாம்பழைய வன்மறை வனத்தை வெட்டி, வளரகங்காரமென மனமெனும் பருமேட் டை மண்வெட்டி கொடுதிருத்தி—சமதலம தாக்கியே நிறைபுத்தி யானவயல் சாந்தமெனு முரமதேற்றி, சாதனச துஷ்ட்டியெ னுங் கொழுவினா லுழுதுழுது தனிஞான விரை பரத்தி—அமுர்த மதி பொழிதருங் குளிர்புனல் பெருக்கியே யஞ்ஞான களைக ணீக்கி, அத்வைத நிச்சயப் பயிர்வளர்த் திட்டபேர்க் காத்ம லாபம் புரிவனுஞ்—சமரஸம தானபுரி ஞான சமுசாரியைச் சார்ந்த ஸத் குருதேசிகன், சம்புதந் தருள்பால செம்பொனம் பலசீல தண்பரங் கிரிவேலனே. 23

## ஞா ன ம்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஞானவா னென்று சொன்னீர் நாதவிந் துவுங்க டந்து
கானலை வரையுஞ் சுட்டுக் கடுவெளி பரமா நந்தந்
தானெனு மவையிரண்டுந் தவிர்ந்துதன் வசமுங் கெட்டு
மோனமுங் கடந்தே யப்பான் முடிந்தவன் ஞானி யாவன். 24

நில்லுநில் லென்று சொன்னீர் நேசபா சங்க ளைந்தும்
புல்லறி வோடு வாங்காப் புலை கொலை களவு மற்றுச்
சொல்லுதற் கரிய ஞானச் சுழுமுனை முடியின் மீதி
னெல்லையுங் கடந்தே யப்பா லேகமா னவர்க ளிற்பார். 25

இருமிரு மென்று சொன்னீ ரேற்குமோ வேழை யேற்குத்
தருபொரு ளுணர்ந்து சைவ சமயமு மனைத்து நீங்கி
மருடரு வினையு நீங்கி மாசிலா வுண்மை ஞானம்
பொருந்தின ரிருப்பர் பின்பு பொருதவ ரிறப்பர் தாமே. 26

## பொருள் வணக்கம்.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடரா யெல்லாம்
வைத்திருந்த தாரகமா யானந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம். 27

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர்மா முனிவர்சித்த
ராதி யானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
செல்வ மாகிக்
கருதரிய மலரின்மண மெள்ளிலெண்ணெ யுடலுயிர்போற்
கலந்தெந் நாளும்
துரியநடு வூடிருந்த பெரியபொரு ளியாததனைத்
தொழுதல் செய்வாம். 28

### ஒருபோகு சந்த விருத்தம்.

அறியவறுவி லணுவாகி யதிலுஞ்சிறு கருவாகி
யடிமுடியு மதிலும் வடிவாய்
விதி ஜீவாதிக ளவைபி லாங்காங் கிருந்துமா
யுருவமதில் வேறுவிதமாய்
இதிலுமதி லெதிலுஞ்சித் தானந்த சத்துமா
யிசைந்தைந் தெழுத்துளுயிராய்த்
துதிகொண்ட தொண்டரிற் பூத்த வெண்ணிறுமா
யுருகொண்ட துல்லிய பொருளே. 29

## பன்னிருசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அவனன்றி யோரணுவு மசையா தெனும் பெரிய
வாப்தர் மொழி யொன்று கண்டால்
அறிவாவ தேதுசில வறியாமை யேதிவை
யறிந்தார்க ளறியார்களார்
மௌனமொ டிருந்ததா ரென்போ ருடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவு மொருமாயை யெங்கே யிருந்துவரும்
வன்மையொ டிரக்க மெங்கே.
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவிடம்
பொய்மெய்த மகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்றபொருளே. 30

## ஆத்ம வனித்திய விளக்கம்.

இப்பவோ பின்னையோ மத்திய காலத்திலோ
இரவிபடு நேரமதிலோ
இரவிலோ பகலிலோ உதயகாலத்திலோ
யெந்தெந்த நேரமதிலோ
அப்பிலோ தீயிலோ நாயிலோ பேயிலோ
அரவிலோ விடியதனிலோ
ஆராத புண்ணிலோ அடர்நோவு தன்னிலோ
ஆயுத வகைக ளெதிலோ
செப்பரிய வீட்டிலோ மேட்டிலோ காட்டிலோ
தெருவிலோ திண்ணை தனிலோ
ஜெகந்தன்னி லெந்தெந்த விடமதினிலோ
ஜீவன்விடு கின்ற நேரம்

அப்போது வந்துனின் கருணைதந் தெனையாளு
மம்பலத் தமர்ந்த வரசை
அண்டபகி ரண்டமொடு நின்றுமொரு தெண்டநிடு
மாதியே சோதிமயமே. 31

## மௌனகுரு வணக்கம்.

கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாக்
காதலித் திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேதுமறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேதுமில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ண முய்வண்ணமோ
இருளைஇரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறு
மெனக்குநின் னருடாரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ளதே யிந்த
வஞ்சகனை யாளநினையாய்
மந்தரகுரு வேயோக தந்தரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே. 32

கானக மிலங்குபுலி பசுவொடு குலாவுநின்
கண்காண மதயானைநீ
கைகாட்ட வுங்கையா னெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக வேந்திவருமே
போனக மமைந்ததென வக்காம தேனுநின்
பொன்னடியினின்று சொலுமே
புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப்
போற்றிஜய போற்றியென்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்.

நட்பினை விரும்புவார் சுகர்வாமதேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்
வானகமு மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்ல வெளிதோ
மந்தரகுரு வேயோக தந்தரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே. 33

## ஆநந்த மானபரம்.

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்தி மேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காண்பதே
நின்னருட் பாரமென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே. 34

## சுகவாரி.

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடுவிலோ
அனனடுவி லோவமிர்த மதிநடுவி லோவன்பர்
அகமுருகி மலர்கநிவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியிலோ

திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டரு வியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீயிற் றிருப்பது
தொழும்பனேற் குளவுபகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. 35

## பன்மாலை.

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

பன்மாலைத் திரளிருக்கத் தமை யுணர்ந்தோர்
பாமாலைக் கேநிதான் பக்ஷ மென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நவையறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனே னைந்நாளுந் துதித்து நிற்பேன்
என்மாலை யறிந்திங்கே வாவா வென்றே
யென்னைக் கலப்பாய் திருக்கருணை யெம்பிரானே. 36

நானெனுங் கெறுமகந்தை யெனக்கேன் வைத்தாய்
நல்வினைதீ வினையெனவே நடுவே நாட்டி
ஊனுறு புடற்சுமையென் மீதேன் வைத்தா
புன்மையறி வென்னையொன்றா வுள்ளேன் வைத்தாய்
ஆனமை யாயகில நிகில மேபத
பன்னத்தி அன்றுந் தானாகி யறிவானந்தத்
தேனும்ப பாலாகிக் கனியாய்க் கன்னற்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த வொன்றே. 37

## நானென்னு மகந்தை விலக்கல்.

ஆங்கார கோவக் களஞ்சியம் மும்மல மடைத்துவைத் திடு பொக்கிஷம், ஆணவமிருந்து குடிகொண் டிருக்கின்றவுட லாசை தருகின்ற ஸ்தூலம், பாங்கான கருவிகர ணாதிகளிருந்து பரிபாலனஞ் செய்யு நகரம், பற்பல பிணிச்சரக்கேற்று பெரும்பாண்ட பந்தநெருங்கக் குலுக்கைதனை, நீங்காத நீடுளி காலமென் றெண்ணியே நின்பதம் வணங்கிடாமல், நெஞ்சமது வெவ்வேரு வஞ்சமதை யெண்ணியே நின்னடிமை யல்லைய விதியோ, தேங்காயில் நீர்விட்ட தெய்வமே அறிவற்ற சிறியேனை யாளவருவாய், செம்பொனம்பலசில சம்புதந் தருள்பால தென்பரங் கிரிவேலனே. 38

## பிறவிக்கஞ்சல் - ஆசிரிய விருத்தம்.

புல்லாய்ப் பிறந்தாலு மிருகாதி ஜெனனங்கள் புசித்தாரி மகிழுமன்றே, பூண்டாய்ப் பிறந்தாலும் புலத்தியர்கள் கொண்டு சில பிணிதீர்த்து புகழ்வரன்றே, கல்லாய்ப் பிறந்தாலு நல்லவர்கள் மிதிகொண்டு காட்சிக்குருத்து மன்றே, கழுதையுரு வந்தாலு மாவெனக்கத்தினால் கைகண்ட சகுன மெனபார், எல்லாமிலாமலே யிப்பிறவி தந்தெனை யேயங்கவிட் டகல நின்றாலெத்தனை அன்னையின மெத்தனை தந்தையின மெத்தனை பிறவி வருமோ, அல்லலெனு மாசறுத் தாட்கொளுந் தெய்வமே அப்பனே தில்லைநகர் வாழ் அதிபதி ஜெனகாதி துதிபதி சிவகாமி அன்பினுறை நடனபதியே. 39

## பொய் வாழ்வு.

கடலென்றபுவிமீதி லலையென்ற வுருகொண்டு கனவென்ற வாழ்வைநம்பி, காற்றென்றமூவாசை மாறுதச்சுழலிலே கட்டுண்டு நித்தநித்தம், உடலென்ற கும்பிக்கு உணவென்ற யிரைதேடி ஓயாமலிரவுபகலும், உண்டுண்டுறங்குவதை கண்டதேயல்லாது ஒருபயனடைந்திலேனே; தடமென்ற மிடிகரையில் பந்துபாசங்களெனுந் தாபரம் பின்னலிட்டு, தாயென்று சேயென்று நீயென்று நானென்று தமையனை யிவ்வண்ணமாய், இடையென்றுகடைநின்று பேயனென்று கேளா திருப்பதுன் னழகாகுமோ, ஈசனே சிவகாமி நேசனே யெனையின்ற தில்லைவாழ் நடராஜனே. 40

## அவசியமும் மனுவசியமும்.

பம்புரு னியமல்ல வைப்பல்லமாரணந்தம்பனம் வசியமல்ல, பாதாள வஞ்சனம் பரகாயப் பிரவேச மதுவல்ல ஜாலமல்ல, அம்புகுண் டுகள்விலக மொழியுமந்திரமல்ல ஆகாயகுளிகையல்ல அன்போடுசெய்கின்றவாதமோடிகளுடன்னறியமோகனமுமல்ல, கும்பமுனி மச்சமுனி சட்டமுனி பிர்மரிஷி கொங்கணர் புலிப்பாணியும், கோரக்கர் வள்ளுவர் போகமுனி யிவரெலாங் கூறிடும் வயித்தியமல்ல, எம்மனதுன் னடிவிட்டு நீங்காது நிலைநிற்க யேது ளவு புகலவருவாய், ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. 41

## செய்யத்தகாதவை.

காயாமுன் மரமீது பூபிஞ்சறுத்தனே கன்னியர்கள் பழி கொண்டனோ, கடனென்று பொருள் பரித்தே வயரெரித்தனோ கிணைவழியில் முள்ளிட்டனோ, தாயாருடன்பிறவிக் கென்னவினை செய்தனோ தந்தபொருளில்லை யென்றனோ, தானென்று கெர்வித்து கொலைகளவுசெய்தனோ தபசிகளை யேசினேனோ, வாயார பொய்சொல்லி வீண்பொருள் பரித்தனோ வாணரைப் பழித்திட்டனோ, வானரம் போல்பிறரை சேர்க்கா தடித்தனோ வந்தபின் என்செய்தனோ, யியாத லோபியென் றேபெயரெடுத்தனோ யெல்லாம் பொருத்தருளுவாய், யீசனே சிவகாமி நேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. 42

## அடைந்தும் பயன்படாதவை.

தாயாரிருந்தென்ன தந்தையுமிருந்தென்ன தன்பிறவி யுறவு கோடி, தனமலை குவித்தென்ன கனபெயரெடுத்தென்ன தாரணியை யாண்டுமென்ன, சேயர்களிருந்தென்ன குருவாய் திரிந்தென்ன சிஷர்களிருந்துமென்ன, சித்து பலகற்றென்ன நித்தமும் விரதங்கள் செய்தென்ன நதிகளெல்லாம், ஓயாது மூழ்கினுமென்னபலன் எமனேலை யொன்றைக் கண்டுத்தடுக்க, உதவுமோ யிவையெலாஞ் சற்றுதவுநமென்றுதா னுன்னிரு பதப்பிடித்தேன்

யார்மீது உன்மன மிருந்தாலு மென்மீது கடைக்கண்பார்வையது போதுமே, யீசனே சிவகாமி நேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. 43

## மூடாண்மை.

பூமிபிற்பிள்ளையாய் பிறந்துமே வளர்ந்துநான் பேரான ஸ்தலமுமறியேன், பெரியோர்கள் தெரிசின மொருநாளு நான்கண்டு போற்றிக்கொண்டாடி யறியேன், வாமியென்றுன்னைசிவ காமியென்றே சொல்லி வாயினாற்பாடி யறியேன், மாதாபிதாவினிட பாதத்தை யானுமே வணங்கியொரு நாளுமறியேன், சாமியென்றேயெண்ணி சதிருடன் கைகூப்பி சரணங்கள் செய்துமறியேன், சற்குருவின் பாதாரவிந்தங்களைக்கண்டு சாஷ்டாங்க தெண்டனறியேன்,ஆமிந்த பூமியில் அடியேனைப் போல்மூட னொட்சிநீ கண்டதுண்டோ, அழகான மதுரையில் புகழாக வாழ்ந்திடும் அம்மை மீனாட்சியுமையே. 44

## அந்தணர் சிறப்பு.

பூமேவு வைதீக நியதிநெறி வழுவாது, புனலின்முச் சந்தி மூழ்கிப், புனிதமுறு பகவதர்ச் சனைபுரிந் தொழுகலும், புகழும் யா காதிநிகழத்—தேமேவு விரதமும் மறையாக மங்கலைகள் தேர்ந்தோது கின்றநலனுஞ், சீலமிகு பத்தியொடு காலமுறை தவறாது ஜெபதபஞ் செய்தறுதியாய்—மாமேவு காயத்ரி மகிமையா லுஞ்சுருதி மந்திரப லத்தினாலும், மாதமொரு மும்மாரி பொழியவைத் துலகெலாம், வளமுறச் செய்து நன்றாய்க்—காமேவு தருவெனத் தருமுறையு மறையோர் மகத்வமென வெகுமன்றோ, கஞ்சனிகர் நற்றுச ரஞ்சலிசெய் மெய்த்தேச கஞ்சகிரி சித்தேசனே. 45

## அரசர் சிறப்பு.

நீதிநெறி வழுவாது செங்கோனடத்துவது நிலைமையது கோடாமலே, நிறைகுடிக ளபிமான மொடுமந்திரியோ சனையும் நீள்சத்திய மிகுதானமுஞ், சாதிமுறை யவரவர்க் கேற்றமரியாதையுஞ் சதுர்வித வுபாயங்களும், சர்வவுயிர் யாவையுந் தன்

ஞபி ரென்றெண்ணலுஞ் சதுரங்க சேனைபலமும், வாதிபிரதி வாதிகள் வழக்கினைடு நிலைமையது மாறுது முடிவு சொல்லு, மாதளக்கர்த்தபிர தானிதானுபதிகள் மகிமையும் வெற்றிவளமும், காதலிசை ரிவையெலா மரசர்கட் குரியவாங் கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனை மங்கைமகிழ் நேசனை கயிலையங் கிரிவாசனை. 46

## வணிகர் சிறப்பு.

முத்துநவ ரத்னமணி பட்டு பட்டாடையும் முதலிட்டு வாங்கிவிற்பார், முதலுக்கு மவைநின்ற தவணைக்கு நாளெண்ணி முடிவான விலைசொல்லுவார், சித்திதரு நிதியிலும் வட்டியினு மொருகாசு சேதம்வா ராதொழுகுவார், தேவாலயந்திருவி ழாவெனும் மேலான செய்கையிற் செலவுசெய்வார், நித்தநித் தம்பற்று வரவெழுது வார்நல்ல நெறியுளோர்க் கேகொடுப்பார், நீதியில் லாக்கொடிய மானிடர்களைத்தூர நிற்கவைத் திடுவர்பட்டுக், கத்தரித் தறுவெனப் பேசுவா ரிவைகள்வணி கக்குலத் தியல்பல்லவோ, கஞ்சநிகர் கற்றுச ரஞ்சலிசெய் மெய்த்தேச கஞ்சகிரி சித்தேசனே. 47

## வேளாளர் சிறப்பு.

ஆட்சிதரு நீதியுங் கொற்றவர்கள் புஜபலமு மதிவீரர் தீரவலியு, மாபிரவர் வாணிப மியற்றுதலு முலகெலா மன்னதா தாவென்பதுந், தாட்சியொன் றில்லாத வந்தணர் மகத்வமுந் தங்குசுப கல்யாணமுஞ், சந்ததஞ் செபதபம் பூசைநே மங்களிவை தப்பாமலேபுரிவதும், மோட்சநிலை தருமருட் குருவினுபதேசமும் முனிவரிருடியர்சீலமும், மூவுலக மும்புகழு வாழ்வுமே லுறு தரும்வேளாண் புற்றுமேழியர் பெருமைகாண், காட்சிதரு கர்த்தனை ஆட்சகா ரணனை கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனை மங்கைமகிழ் நேசனை கயிலையங் கிரிவாசனை. 48

## கல்விச் சிறப்பு.

கடலுலகி லுற்றபொரு ளுக்குளே நன்மைதரு கல்விநிலை பெற்ற பொருளாங், கனலினா லுருகாது 'புனலினாற் கரையாது கள்ளராற் றிருடொணாது, திடமான ராசாதி ராசராலும்மதைத் தீண்டிச் சிதைக்கொணாது, செயன்மிக்க மாதராற் சேதமா காதொருவர் செலவிடிற் குறைவ றாதாங், கடமிகு சகோதரர்க் கிடமது கொடாததனை யளவிடவு முடியாதுகா, ணப்பொருளி னிப்பெரு திப்புவியி லிலகின்ற வற்பருறு பயனென் கொலோ, கடகய முரித்துட லினிற்றரித் திடுதேவ கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரி வாசனே. **49**

## குருவி னியல்பு.

சீலமுயர் நிலைமையும் பாசவயி ராக்யமுஞ் சிவபத்தி மிகவு முளராய்த், திகழ்கின்ற வேதாந்த நாதாந்த யோகாந்த சித் தாந்த நெறியுணர்ந்து, பாலதாகியநாலு வேதமறு சாத்திரம் பதி னெண்பு ராணமுடனே, பகர்கின்ற வறுபத்து நாற்கலைக் கியானமும் பயனறிந் தநுபோகராய், மேலதா கியவாறு தலமுங் கடந்துபாழ் வெளிகண்டு வீரசைவ விதிமுறை வழாதுமெஞ் ஞானவழி காட்டுவோர் மேலான சற்கு ரவராங், காலனை யுதைத்துமார்க் கண்டனைக் காத்தவா கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரி வாசனே. **50**

## கட னீயாவிடம்.

வாத்தியார் கவிவாணர் வறுமையர்க டனதுகுரு மறை யோர்கண் மந்த்ரவாதி, மாதர்பொது மங்கையர்கள் பண்டிதர்க ளஞ்சாத மாவீர ரடிமை யானோர், சாத்திரஞ் சொல்பவர்கள் கருணிகர்கள் பிச்சாண்டி தபசிசந் நியாசி தட்டான், சவரகன் கூத்தாடி வேசிகான் தன்பந்து தாயாதி யிவர்கட்கெலாம், பூத்த னற் செல்வர்கட னீந்திடின் மீண்டுமப் பொருள்வந் துறாது கேட்

கிற், பொல்லாங்க தாய்ப்பிறுங் கைப்பொருட் சேதமாய்ப் போகுமெனவேயு ரைப்பார், காத்தருள்செய் கர்த்தனே கீர்த்தவ ரகத்தனே கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனே மங்கை மகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே. 51

## கருமிக ளாவோர்.

மனிதனென வுருவுகொண் டுனதுதிரு வடியிணை வணங் கிடா னொருகருமியாம், மனைவிசுத ரிலையவே வேசியே கதி யென்று வைகுவோ னொருகருமியாந், தனமிக விருக்கவுண் ணாதுடுக் காதுமெய் தளர்ந்தவோ னொருகருமியாம், சந்யாசி யாகியும் பெண்ணாசை விட்டிடாச் சண்டாள னொருகருமியாம், மன வாத ஞானநூ லோதி யாணவமதை யகற்றிடா னொருகருமியா, மன்னைதந் தையர்கள்பசி நோய்கொண் டலைந்திட வருந்துவோ னொருகருமியாங், கனகசபை தன்னிலே நடனமிடு பாதனே கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே. 52

## உள்ளூரிற் சிறப்படையாதவர்.

உள்ளூரில் வேசையர் பணிக்கருப தேசிக ளுபாத்தியா ரான பேர்க ளுயர்தவம் புரிகுரவர் மறுதேச மன்னவர்க ளோங்குவா ணியர்தூ தர்க, டென்றுதமிழ் கவிவாணர் கூத்தாடி கோணங்கி செப்படிகள் கற்ற பேர்க, டிரமான நாணயர்கள் சோதிடர் வைத்தியர்கள் சிலதொழில் கற்றுளோர்க, ளுள்ளபடி யிரெட்டு பேர்களோபு மெள்ளளவு முள்ளூரி லுறுதி கொள்ளா, ருண்மை யாக்கள்ளூண்பராகினும் பதியர்தமை யுலகெலாங் கொண்டாடு வார்கள் கலியுகமதி லடக்கமிகிது வாகுமே கற்பக விராச மேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே. 53

## கருடதரிசனபலன்.

ஆதிவா ரந்தனிற் கருடனைத் தரிசிக்கி லரியபிணி யாவு மகலு, மதிபெறு திங்கள்மங் களவார முந்தொழ வகத்தி னுறு துயர்களும் போம், நிதிதரு புந்தியுங் குருவார முந்தொழ

நெடியகு னியமு மகனும், நிறைவெள்ளி சனிவார பிரவிசா யுங்காலை தேடியே தரிசித் திடின், மேதையொடு தனகனக வாகனாதிகண் முதன் மேன்மைபெறு செல்வ முளதாம், வேந்த ரென வாழ்ந்துதம திருகண்க ளிக்கமுடி விற்பரம பதமடைகு வார், காதலுட னேபணிசெய் யன்பருக் கருளுதவு கற்பக விராச மேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே. 54

## பதுமினிப் பெண்குணம்.

செண்பக நிறத்தினள் கூவிளங் கொங்கையாள் திவ்வியமலர் வாசமுடையாள், ஜெபமதுர வாக்கினள் பொய்யுரை சொலாத வள் செந்திரு தனக்கு நிகராள், யன்பாக வேயமரர் பெரியோர் தமைப்பணிவள் நடையன்ன மின்சொ லுடையாள், நவிலிடை சிறுத்திடும் வெண்டுகி லுடுப்பனள் வல்குற மரைநே ரினள், வண்மைபெறு சுரதநீர் கோகனக வாசமா மானனைய காட்சி யுடையாள், மாதுரிய கனியுண்ப ளெப்பூவி லுசியாள் மாவிரவி சாயா முனங், கணமெனுங் கண்படாள் பதுமினிப் பண்பிதாங் கற்பக விராசமேவுங் கங்கைபுனையீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே 55

## இதுவிதனை வசப்படுத்துமெனல்.

சிந்தைதெளி கல்வியே லோகவசி யம்பத்தி, செய்வதே தெய்வ வசியஞ், செய்யுமரி யாதையே யிந்வசன வசியமாஞ் செல்வமுற வோர்கள் வசியம்—எந்நவிதமுந்திரள நல்கும்ப ணங்களே யின்பவிலை மாதர் வசியம், எப்பொழுது மவர்மன தறிந்து கட்டிக்காத் திருப்பதே ராஜவசியம்,—தந்ததன் டனை களே துஷ்டான வசியமாந் தானமே கீர்த்தி வசியஞ், சாந்த குண நயமாய் நடந்திடு மொழுக்கமே, சகலசன வசியமாகும்— மந்திர மெழுத்தெட்டு மேயுனது வசியமாம் மணவாள நாரா யணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே வரத வேங் கடராயனே. 56

## இச்செய்கையோர்

## இச்சிறப்புப்பெயர் கொள்வரெனல்.

சரணென் றடைந்தவர் தமக்குவரு வினையெலாந் தாங்குவோன் புருஷமேரு, தன்னுடைய செய்கைபோ லெவரையும் பார்க்கின்ற தகைமையோன் தெய்வ புருஷன்—திரணமெனி னும்பிறர் பொருட்காசை யில்லாத செய்கையோன் புருஷோத்தமன், பிராதவினைவரினு மற்பரைப் பணியாத தீரனே புருஷசிங்கம்—போரதிலாத் தந்தைதா யென்னினுங் கண்டபடி புகலுவோன் புருஷரத்நம். போற்றுமவர் மனதிற் குறிப்பறிந் துதவுவோன் புருஷநாயகமென்பர் காண்— மரபெலா மிப்படி புகழ்ந்தருண சேகரன் மணவாள நாராயணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே வரதவேங் கடராயனே. 57

## வைத்திய ரியல்பு.

நாடிகணி தானமும் வெண்விதப் பரிட்சையொடு நாடிப் பிணிக் குறிகளும், நவசித்தர் கோரக்கர் கும்பமுனி தன்வந்திரி நவிலும்வாகட முமோர்ந்து—சாடிவரு மூலிகை யொடறுபத்து நான்காஞ் சரக்குவகை முறைதெரிந்து, தயிலங்கள் பஸ்பங்கள் கிருதங்கள் குளிகையொடு சகலவவுஷத முறைகளும்—நீடுமா புருஷத யோகமாதிபுத் தகண்டு பனிரெண்டு மோர்ந்த, நிலை புரோர்தங்களைப் பண்புதர்க் கொடுப்பரிந் நிலைதனிலானவக், காடதனி லென்றசிவ யோகியர் சிதம்பரவு கற்பக விராசமேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே. 58

## வியாதிவரு மூலம்.

மயிரினா லுமியினுங் கடுவழி நடக்கையால் மலசல மடக்கையாலும், மனதுருய ரத்தினுங் கல்லினுன் நெல்லினுன் மாதர்கள் புணர்ச்சியாலும். தமிரரவி லுண்ணலாற் கனிபல வருந்தலாற் சருகுரணி ருநம், தயிலபது மூழ்கிபட பங்கையொடு சேர்த

லாற் றண்பனியி னாற்கா லையில், வெயில்காய்த லாற்கண் விழித்த
லால் மிக்குணவு மேவலால் வெகு நித்ரையால், விளம்பிடும் பத்
தியத் தாழ்வினால் வினையினால் வியாதிவரு மூலமென்பார், கயிர
வந் தனைவென்ற செவ்வித மடந்தைசூழ் கற்பக விராச மேவுங்,
கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவா
சனே. 59

## நோய்க்கிடங்கொடார் செய்கை.

சனிபுதன் றனிலெண்ணெய் வெந்நீரின் மூழ்குவார் சாரு
மிள வெயில் விரும்பார், தம்வயதின் மேலான மங்கையைச்
சேரார் சதாகாலம் வழியி நடவார்—பனியிலுங் காற்றிலும்
மெய்வருந் தார்மடைப் பள்ளியிற் சேவகமிரார், பழங்கறி
யருந்தா ரிரண்டடக் காரொன்று பகைகால மும்விட் டிடார்—கனி
யொடு கிழங்குகள் மிகுந்துபுசி யார்பசி கலந்தன்றி யுணவுசெய்
யார், காய்ச்சுபா லுண்பர்நீர் மோர்கூட்டு வார்தினங் காவேரி
தனின் மூழ்குவார்—மனிதரிவர் பேர்சொன்ன பேர்க்குநோய்
சேருமோ மணவாள நாரா யணன், மனதிலுறை யலர்மேலு
மங்கைமண வாளனே வரதவேங் கடராயனே. 60

## மருத்துவர் செல்லத்தகா விடங்கள்.

தீராத ரோகமுடை யோரிடமு முண்மையது செப்பாத
பொய்யரிடமுஞ், சீரான வொருவர் பண்டிதமன்றி வெகுவிதஞ்
செய்துகொள் வோர்களிடமும்—வராத கோபமுறு மூர்க்கமன்
னவரிடமு மேந்திழையை மனது பிரியா, வின்பமா மதிவிரக
மானகா முகரிடமு மெப்படி நலஞ்செய்யினும்—தாராத லோப
ரிட முப்பத்தி யந்தனைத் தாழ்வுசெய் வோர்க ளிடமுஞ், சகல
சன கண்டக ரெனுந்துஷ்ட ரிடமுமிகு தனமாரியே பொழியி
னும்—வாராதிருப்பதே பண்டிதர்க ளிதிகாண் மணவாள நாரா
யணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே வரத
வேங் கடராயனே. 61

## கிரி விசேஷம்.

சீர்கொண்ட மேருகிரி வடவேங்க டாசலந், தேசுமிகு சோணாசலந், திகழ்பழனி யங்கிரி சிவாசலங் கந்தமலை தென்ப ரங்கிரியி ராமகிரி—சீர்கொண்ட தீர்த்தமலை சதுரகிரி யிடபகிரி நீல கிரி நாகாசலம், நியதியபு யோர்பரவு கைலையங் கிரிபெரிய நேச மூறு மிமயாசலம்—வார்கொண்ட யானைமலை சோலைமலை நல மிகு வராகமலை சிராத்துருமலை, மகிமைபெறு தணிகையொடு கடி காசலம்பலர் வணங்குமெந்தன் பொதிகையுடனே—கார்கொண்டு பொழிகின்ற மலைவள மெலாநினது கஞ்சாசலந் தமையுமே, கஞ்சநிகர் நற்சர ணந்தவிசெய் மெய்த்தேச கஞ்சகிரி சித் தேசனே. 62

## தீர்த்த விசேஷம்

திருவலவு சிந்துநதி காவேரி கண்டகிவ சிஷ்டநதி கோதா வரி, சுந்தரநதி கங்கைநதி கூடலம் புரிவைகை திறழ்கச்சி மருவு கம்பை—நருமதை சரஸ்வதி பவானியம ராவதி நறும்புன னிறைந்த யமுனை, நாடெலாம் புகழ்பரவு துங்கபத் திரையோடு சரஸ்புரு மைராவதி—மருவுநல மிகுபெண்ணை யாதியாப் புகல் கின்ற மாநதிப் புண்ணியமெலாம் வந்துற வளிக்குநின் கஞ்சாச லத்தாடு வநதாந்த நதிதோய்ந்திடிற்—கருவலயு மறுபிறவி யணு காது புத்திரசந் தனமகிமை புடையதன்றோ, கஞ்சாணிகர் நற்சர ணந்தவிசெய் மெய்த்தேச கஞ்சகிரி சித்தேசனே. 63

## நகரச் சிறப்பு.

துதிபெறு திருப்பதி சிவாலயங் கோபுரஞ் சுற்றுமதின் மண்டபங்கள், தபவேத வியர்வீதி துரைராஜ வீதியுஞ், சொல்லு மற்றை தேர் வீதியும்—பதக்ஷறு ரகமிர்த படைகளுறை வீடுதியும் பலர்மேவு கடைவீதியும், பரதசங் கீதமுறை வழுவாது மங்கை யர்கள் பாடலாடரபதேயும்—புதியபூம் பொழில்சோலை சகோர ருக தடாகமும் புனற்பரவு பகழ்வீதியும், பூரிமுத லானபதி

னுறுவித தானமும், பூபால ருதவு கொடையுங்—கதிர்பரவு ராஜதா னிக்குரிய நகரியிற் காலூழு சிறப்பல்லவோ, கஞ்சநிகர் நற்குச ரஞ்செலிசெய் மெய்த்தேச கஞ்சகிரி சித்தேசனே. 64

## சரீர நிலையாமை.

ஆகாய மீதினி லெறிந்தசிலை காற்றினை,யடைத்துவைந் திடு துரித்தி, யனலிட்ட மெழுகுவெயி லிடையிட்ட வெண்ணெய்சுழி யாற்றிடை யெழுந்த குமிழி—மோகா விகாரமொடு வருகின்ற மின்னல்விழி மூடுதுயில் கண்ட கனவு, மோதிவரு காற்றினிற் றீவிழுந் திடுபஞ்சு மூச்சோடு நின்ற பதுமை—மீகாம னில்லாத கப்பல்கண் ணிமைபோல் விளங்கவரு தேக மிதனை மெய்யயென்று மெய்யலாம் பொய்யென்று திரிகின்ற விழலனெனை யாள நினை வாய்,—மாகாள முகிலனைய மெய்யனே துய்யனே மணவாள நாராயணன், மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே வரத வேங்கடராயனே. 65

## பிதாக்கள்.

தவமது செய்தே பெற்றெடுத்தவன் முதற்பிதா, தனைவள ர்த்தவனொருபிதா, தயையாக வித்தையைச் சாற்றினவ னொரு பிதா, சார்ந்தசற் குருவொரு பிதா—அவமறுத்தாள்கின்ற வர சொரு பிதாநல்ல வாபத்து வேளை தன்னில்,அஞ்சலென் றுற்ற துயர் தீர்த்துளோ னொருபிதா வன்புளோ னவனொரு பிதா— கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னொருபிதா, கலிதவிர்த் தவ னொருபிதா; காசினியி லிவரைநித் தம்பிதா வென்றுளங் கருது வது நீதியாகும்—மவுலிதனின் மதியரவு புனைவிமல ருதவுசிறு மதலையென வருகுருபரா, மயிலேறி விளையாடு குகனேபுல் வய லீடு மலைமேவு குமரேசனே. 66

## குறிப்பறிதல்.

மனதிற் கடும்பகை முகத்திலறியலா, மாநிலப் பூடுகளெ லாம்,மழையிலறியலா நல்லார் பொல்லார்தமை மக்களாலறிய லாகும்—கனமருவு சூரரைச் சமரிலறியலாங், கற்ற வொரு

வித்தை வாளைக், கல்விப்ர சங்கத்தி னாலறிய லாங்குணங் களை நடையினா லறியலாகும்—தனதக மடுத்தது பளிங்கினா லறியலாஞ் ஜாதி சொல்லா லறியலாந், தருந்தி கேள்வியா லறியலாம் பிணி களைத் தாதுக்களா லறியலாம்—வனசவிக சிதவதன பரிபூரணா னந்த வாலவடி வான வேலா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 67

## முயற்சியின்மிக்க தாழெனல்

வங்காள மேகினும் வாருகோ லொருகாசு, மட்டன்றி யதிக மாமோ, வானேறி யுயரப் பறந்தாலு மூர்க்குருவி வண் ணப் பருந்தாகுமோ—கங்கா ஜலந்தன்னில் மூழ்கினும் பேய்ச் சுரைக் காய்நல்ல சுரையாகுமோ, கடலுக்குள் நாழியை யமுக் கியே மொண்டிடிற் காணுமோ நாழிதான்—ஐங்காத மோடி னுந் தன்வினை தன்னொடே, யடையாம னீங்கி விடுமோ, யாரி டஞ்சென்றாலும் வெகுநூல்கள் சுற்றினு மமைத்தபடி யன்றி வருமோ—மங்காத செந்தமிழ்க் கொண்டுநக் கீரர்க்கு வந்த துயர் தீர்த்த முருகா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 68

## சரீர சுகம்.

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது, மறுவரு விரோ சனந்தான், வருஷத் திரண்டு விசை நசியந் தலைக்கிடுதல் வாரத் திரண்டுவிசையாம், மூதறிவி னொடுதனது வயதினுக்கிளையவொரு மொய்த்த மடமங்கை யோகம், புத்துருக்கிய காய்ச்சுபால் நீர்மோ ருருக்குநெய் யதிக வழுக்கை யிளநீர்—சாதத்தி லெவ்வளவா னாலும் புசித்தபின் குறுநடைக ளாங்கல், தயையாக வுண்டபி னுலாவியே மேவர் சரீரசுக மாமென்பர் காண், மாதவ குமாரி பாலைக் குறித்தகுற வள்ளிக் குகந்த தீரா, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 69

## வறுமையிற் சிறுமை.

வறுமை தான் வந்திடிற் றுய்பழுது சொல்லுவாள் மனையாட்டி சற்று மெண்ணுள், வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத வசனமாய் வந்துவிளையும்—சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது சிந்தையிற் றைரியமில்லை, செய்யசபை தன்னிலே சென்று வர வெட்கமாஞ் செல்வரைக் காணி னுனும், உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரி லுயிருடன் செத்த பிணமாம், உலகம் பழித்திடும் பெருமையோர் முன்புசென் றொருவரொடு செய்தி சொன்னல்—மறுவசன முஞ்சொலார் துன்பினிற் றுன்பமிது வந்தனுகி டாதருளுவாய், மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 70

## தெய்வச் செயல்.

சோடாய் மரத்திற் புறுரெண் டிருந்திடத் துறவுகண்டே வேடுவன்,றேலாம லவையெய்ய வேணுமென்றொருகணை தொடுத்து வில் வாங்கிநிற்க—ஊடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற் குலவு ராசாளி கூட, உயரப் பறந்து கொண் டேதிரிய வப்போ துதைத்தசிலை வேடனடியில்—சேடாக வல்விஷந் தீண்டவே யவன் வீழச் சிலையிற் றொடுத்த வாளி, சென்றிராசாளி மெய் தைத்துவிழ வவ்விரு சிறைப்புறு வாழ்ந்த வன்றோ—வாடாம லிவையெலாஞ், சிவன் செயல்க ளல்லாது மனச்செயலி னுலும் வருமோ, மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு குமரேசனே. 71

## சிறுமையிற் பெருமை.

சேற்றிற் பிறந்திடுங் கமலமலர் கடவுளது திருமுடியின் மேலிருக்குந், திகழ்சிப்பி யுடலிற் செனித்த முத் தரசரது மேதகத்தின் மேலிருக்கும்—போற்றியிடு பூச்சியின் வாயினுல் பட்டென்று பூசைக்கு நேசமாகும், புகலரிய வண்டெச்சி லானதேன்

றேவர்கொள் புனிதவபி ஷேகமாகும்—சாற்றிய புலாலொடு பிற ந்த கோரோசனை சவாதுபுழு கனைவர்க்குமாம், ஜாதியினத்திற் பிறக்கினுங் கற்றோர்கள் சபையின்மேல் வட்டமன்றோ—மாற் றிச் சுரத்தினை விபூதியா லுடல்குளிர வைத்த மெஞ்ஞான முதலே,மயிலேறி விளையாடு குகனேபுல் வயனீடு மலைமேவு கும ரேசனே. 72

## மேன்மை யுயர்ச்சி.

தன்மட்டி லிரவாது சீவனஞ் செய்பவன் சாமர்த்ய முளபுருஷ னும், சந்ததப் பதின்மரைக் காப்பாற்று வோன் மிக்க தரணிபு கழ் தருதே வனும்—பொன்மட்டி லாமலீந் தொரு நூறு பே ரைப் புரப்பவன் பொருவி லிந்தரன், புவிமீதி லாயிரம் பேர்த மைக் காப்பாற்றும் புண்யவானே பிரம் மனும்—நன்மைதரு பதினாயி ரம்பேர் தமைக்காத்து ரட்சிப்ப வன்செங் கண்மால் நாளுமவன் மேலதிக மாகவெகு பேர்க்குதவு நரனே மகாதே வனும்—அன்மட்டு வார்குழலி பாகனே யேகனே யண்ணலெம தருமை மதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 73

## திருமங்கை யிருப்பிடம்.

நற்பரி முகத்திலே மன்னவ ரிடத்திலே நாகரிகர் மாமனையிலே, நளினமலர் தன்னிலே கவிளங் தருவிலே நறைகொண்ட பைந்து ளபிலே—கற்புடையர் வடிவிலே கடலிலே கொடியிலே கலி யாண வாசர்தனிலே, கடிநகரிடத்திலே நற்செந்நெல் விளைவிலே கதிர்பெறு விளக்க தனிலே—பொற்புடைய சங்கிலே மிக்கோர் கள் வாக்கிலே பொய்யாத பேர்பா லிலே, பூந்தடந்தன்னிலே பாற்குடத் திடையிலே போதகத் திண்சி ரசிலே—அற்பெருந் தோரணமலர் மங்கைவாழிட மென்ப ரண்ணலெம தருமை மத வேள், அனுதின மு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுர தேவனே. 74

## மூதேவி யிருப்பிடம்.

மிதமின்றி யன்னம் புசிப்போ ரிடத்திலு மிகுபாஷை யோரிடத்தும், மெய்யொன்றிலாமலே பொய்பேசி யேதிரியு மிக்கபா தகரிடத்தும்—கதியொன்று மிலர் போல மலினங் கொளும் பழைய கந்தையணி வோரிடத்தும், கடிநா யெனச்சீறி யெவரையுஞ் சேர்க்காத கன்னிவாழ் மனையகத்தும்—நதிசேர் கடத்திலுங் கர்த்தபத் திடையிலுஞ் சார்ந்த வாட்டின்றி ரளினும், சாம்பிண முகத்திலு மிவையெலாங் கவலைபுரி தௌவைவாழிடமென்பர்காண்—அதி ரூப மலைமங்கை நேசனே மோழைதரு மழகனெம தருமை மதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதே வனே. 75

## குணகுண மிரண்டினும் பயன்படாமை

குணமற்ற பேய்முருங் கைத்தழை தழைத்தென்ன குட்டநோய் கொண்டு மென்ன, குரைக்கின்ற நாய்மடி சுரந்தென்ன சுரவாது கொஞ்சமாய்ப் போகி லென்ன—மணமற்ற செம்முருக் கதுபூத் தலர்ந்தென்ன மலராது போகிலென்ன, மதுரமில் லாவுவர்க் கடனீர் கறுத்தென்ன மாவெண்மை யாகி லென்ன—உணவற்ற பேய்ச்சுரை படர்ந்தென்ன படரா துலர்ந்துதான் போகிலென்ன, உதவாத பேர்க்குவெகு வாழ்வுவந் தாலென்ன வோங்கு மிடி வரிலென்ன காண்—அணியுற்ற பைங்கொன்றை மாலிகாபரணனே யாதியே யருமை மதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதே வனே. 76

## அது வது வாகாமை.

உள்ளன்பி லாதபேர் தித்திக்க வேபேசி யுறவாடு முறவு முறவோ, உபசரித் தன்புடன் பரிமாரிடாத சோ றுண்பவர்க் கன்னமாமோ—தள்ளாதிருந்து கொண் டொறுவர் போய்ப் பார்த்து வரு தக்கபயிர் பயிராகுமோ, தளகர்த்த னொருவனில் லாமன் முன் சென்றிடுந் தானையுந் தானையாமோ—விள்ளாத போக

மில்லாதபெண் மேல்வரு விருப்பமும் விருப்பமாமோ, வெகு கடன் பட்டபேர் செய்கின்ற ஜீவனமு மிக்கசீ வனமாகுமோ— அள்ளா திருக்கருணை யாளனே தேவர்தொழு மாதியே யருமை மதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 77

## நற்குணங்களுக் கிட மாகாதவர்.

வெறி கொண்ட மற்கடம் பேய்கொண்டு கள்ளுண்டு வெங்காஞ் சொறிப்பு தவிலே, விழ்ந்து தேள் கொட்டிடச் சன்மார்க்க மெள்ளளவு மேவுமோ மேவாது போல்—குறைகின்ற புத்தியா யறி வற்ப சாதியாய்க் கூடவே யிளமை யுண்டாய்க், கொஞ்சமா மதிகார முங்கிடைத்தான் மிக்க குவலயந் தனிலவர்க்கு—நிறைகின்ற பத்தியுஞ் சீலமும் மேன்மையு நிதானமும் பெரியோர் கண் டபேல், நேசமும் பீகையும் மிவையெலாங் கனவிலு நினைவிலும் வாராது கண்டாய்—அறைகின்ற சுருதியின் பொருளான வள்ளலே யண்ணலே யருமை மதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 78

## இதற்கு இது வேண்டு மெனல்

தனக்கு வெகு புத்தியுண் டாகினும் வேறொருவர் தன்புத்தி கேட்க வேண்டும், தானதிக சூரனே யாகினுங் கூடவே தளசேகரன் வேண்டும், கனக்கின்ற வித்துவா னாகினுந் தன்னினுங் கற்றோரை நத்த வேண்டும், காசினியை யொருகுடையி லாண்டாலும் வாசலிற் கருத்துள்ள மந்திரி வேண்டும்—தொனிக்கின்ற சங்கீத சாமர்த்திய னாகினுஞ் சுருதி கூட்ட வொருவன் வேண்டும், தடையில்லாத கவியினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோ லொன்று வேண்டும்— அனைக்கண்ணா னைபடிக சங்கநிகர் வண்ணனே யையனே யருமை மதவேள் அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 79

## வறுமையின் கொடுமை.

மேலான ஜாதியி லுதித்தாலு மதிலென்ன வெகுவித்தை கற்று மென்ன, மிக்கவதி ரூபமொடு சற்குண மிருந்தென்ன மிகுமானி யாகிலென்ன—பாலான மொழியுடைய னுயென்ன வாசார பரனு யிருந்து மென்ன,பார்மீது வீரமொடு ஞானவா னுயென்ன பாக்கிய மில்லாத போது—வாலாய மாய்பெற்ற தாயுஞ் சலித்திடு வள் வந்த சுற்றமு மிகழுமே, மரியாதை யில்லாம லனைவரும் பேசுவார் மனைவியுந் தூறு சொல்வாள்—ஆலால முண்டகனி வாயனே நேயனே யனகனே யருமை மதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 80

## உண்மை யுணர் குறி.

சோதிடம் பொய்யாது மெய்யென்ப தறிவரிய சூழ் கிரகணஞ் சாட்சியாம், சொற்பெரிய வாகடம் நிசமென்கை பேதிதரு தூய மாத்திரைசாட்சியாம்—ஆதியிற் செய்ததவ முண்டில்லை யென்பதற் காளடிமையே சாட்சியாம், அரிதேவ தேவனென் பதையரிய முதனூ லரிச்சுவடி யேசாட்சியாம்—நாதனே மாதேவ னென்பதற் கோருத்ர நமகசமுகஞ்சாட்சியாம், நாயேனை ரட்சிப்பதுன்பார மரியய னுளுமர்ச் சனைசெய் சரணத், தாதிநாயக மிக்க வேதநாயகனுன வண்ணலே யருமை மதவேள் — அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 81

## பிறவிக்குண மாரூமை.

கலங்காத சித்தமுஞ் செல்வமு ஞானமுங் கல்வியுங் கருணை விளையுங், கருதரிய வடிவமும் போகமுந் தியாகமுங், கனரூப முளமங்கையும்—அடங்காதவீரமும் பொறுமையுந் தந்திரமு மாண்மையு மமுத மொழியும், ஆனவிச் செயலெலாஞ் சனனவாசனையினு லாகிவருமன்றி நிலமேல்—நலஞ்சேரு மொருவரைப் பார்த்தது பெறக்கருதி னண்ணுமோ ரஸ்தாளிதன், நற்சுவை தனக்கு வர வேம்புதவ மேநெடிது நாள்செயினும் வாராது காண்—அலங்கார மாகமலர் கொன்றைமா லிகைசூடு மண்ணலேயருமைமதவேள், அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 82

## அரிய ராவோர்,

பதின்மரி லொருத்தர்சபை மெச்சிடப் பேசுவோர் பாடுவோர் நூற்றி லொருவர், பார்மீதி லாயிரத் தொருவர் விதிதப்பாது பாடிப்ரசங்க மிடுவோர்—இதனருமை யறிகுவோர் பதினாயிரத் தொருவ ரிதையறிந் திதய மகிழ்வால், ஈகின்ற பேர்புவியி லேயருமை யாகவே யிலட்சத்திலே யொருவராம்—துதிபெருக வருமூன்று காலமு மறிந்த மெய்த் தூயர்கோடியிலொருவராந், தொல்லுலகு புகழ்காசி யேகாம் பரங்கைலை சூழுமவ ஞசிம்பருர்—அதிகமுள வெண்காடு செங்காடு காளத்தி யத்தனே யருமை மதவேள்; அனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே. 83

## அரிதெனல்

ஊமைசெவி டொடுபேடு குருடுகூ னின்றியே யுலகிற்செனித்தலரிதாம், ஒருறுப் புங்குறைக ளின்றியுயர் குலமதி லுதித்தலது தனினு மரிதாம்—வாய்மைமிகு கல்வி மானுவதரி தாஞ்செல்வ வானுவ ததினுமரிதாம், வணக்கமு மொழுக்கமும் வாய்ப்பதரி தாந்தர்ம வானுவ ததினு மரிதாம்—ஆமிதினு மத்துவித நெறியுணர்ந் தாசா னநுக்ரகம்பெறுவதரிதா, மட்டாங்க யோகமெய்ஞ் ஞானமு நிறைந்திடுத லதினுமரி தரிதுகண்டாய்—காமிசிவ காமியபி ராமிமதி சாமியே கற்பகவிராக மேவுங், கங்கைபுனை யீசனே மங்கைமகிழ் நேசனே கயிலையங் கிரிவாசனே. 84

## துன்மார்க்கர் செயல்களுக் குதாரணம்.

குரங்கனலில் வீழ்ந்துவெறி கொண்டுதேள் கொட்டக்
கரஞ்செறியப் பாம்பலவன் கவ்வ—விரைந்து பேய்
பற்றவே கள்ளுண்டு பச்சைமிள கைக்கடித்தால்
எத்தனைபார் சேட்டைக் கிடம்.

(பொ-ரை) ஒரு குரங்கானது நெருப்பில் விழுந்து பித்தப்பிடித்து தேள் கொட்டவும், பாம்பு கையிற் சுற்றிக்கொள்ள நண்டு கவ்விக் கொள்ளவும், விரைவாய் பேய் பிடித்து கள்ளைக்குடித்தும் பச்சைமிளகைக் கடிக்குமாயின், சேட்டைகளுக்கு இடமாவன எத்தனையோ அத்தனையும் துன்மார்க்கர்களுக்கு முண்டாகும்-எ-று. 85

## சிலேடை

முக்காலுக் கேகாமுன் முன்னரையில் வீழாமுன்
அக்கா லரைக்கால்கண் டஞ்சாமுன்—விக்கி
இரும்முன் மாகாணிக் கேகாமுன் கச்சி
ஒருமாவின் கீழரையின் றோது.

இ-ள். (என்வாக்கே) முக்காலுக்கு ஏகாமுன்— மூன்றுகால்களைக்கொண்டு நடவாமுன்னமே, முன் நரையில் வீழாமுன் — இனிவரக்கடவதாகிய நரையுள தாவதன் முன்னமே, கால் அக்காலரைக்கண்டு அஞ்சாமுன்—உயிரானது அந்த காலதூதரைக்கண்டு பயப்படா முன்னமே, விக்கி இருமாமுன்—விக்கலெழுந்து இருமாததற்கு முன்னமே, மாகாணிக்கு ஏகாமுன்—பெரிய இடமாகிய மயானத்திற்குச் செல்லாததற்கு முன்னமே, கச்சி—திருகாஞ்சிபுரத்தி லுள்ள, ஒருமாவின் கீழரை—ஒருமாமரத்தின் கீழே எழுந்தருளியிருக்கின்ற ஏகாம்பரநாதரை, இன்று ஓது-(இளமைப் பருவமுள்ள)இப்பொழுதே துதிசெய், எ-று.
86

## விருத்தம்.

மனமது செம்மையானல் மந்திரஞ்செபிக்க வேண்டாம்
மனமது செம்மையானல் வாயுவை யுயர்த்த வேண்டாம்
மனமது செம்மையானல் வாசியை நிருத்த வேண்டாம்
மனமது செம்மையானல் மந்திரஞ் செம்மையாமே. 87

## விபூதி மஹாத்மியம்—ஸீஸகவி.

வெண்ணீறு சாற்றினு லெவ்வினை யகன்றிடும், வேதமுஞ் சித்தி வெகு செல்வமுண்டாம்—எண்ணிலா ருத்ராக்க மிலகுநீரணிந்த பேரிருநான்கு திசையுட னிருந்து வாழ்வார்—நன்னியே திருநீறு நன்மையாய் பூண்டபேர் நமனைவென் றிடுமொழிகள் நவிலதாகும்—உன்னியே திருநீறு முண்மையாய் பூண்டபே ருடன்கூடி சிவனுமையை யூடாடுவர்—சுந்தரவிபூதியை யணிந்தபேர்க்கு ஜெனன மில்லை, இந்த விபூதி மகுத்வ மியம்பக் கேட்க, அந்தி வண்ணன் பூசையிலு மதிகமாகும், முந்திய தவத்தினி லுயர்ந்த முனிமார்க் கண்டனரே. 88

## பரமானந்த தீபம்—விருத்தம்.

புலைகளொடு கொலைகளவு கட்கா மத்தைப்
புந்திதனிற் கருதாமல் நிற்பா யாகில்
மலைமகளோர் பாகனுந்தன் வசமாய் நிற்பான்
மாதவமு நிலைக்குமிந்த வழிநில் லார்க்கு
அலைகடலிற் றுரும்பதுபோல் மனந்தள் ளாடும்
அறிவுதனக் கானிவரு மதுவல் லாமல்
நிலைதவறு மெழுபிறப்பும் நீங்கா தென்றே
நீணிலத்தி லருமறைக ளோதும் வாறே. 89

## குரு வுபதேசம்.

அனைத்துயி ரொன்றா யெண்ணி யரும்பசி யெவைக்குமாற்றி
மனத்துள பேதாபேதம் வஞ்சகங் களவு சூதுஞ்
சினத்தையுந் தவிர்ப்பா யாகில் செய்தவம் பின்வே றுண்டோ
உனக்கிது வுறுதிகண்டா யுபதேச மிதுவே தானே.

## அறியாமை.

ஒருபனை யிரண்டுபாளை யொன்று நுங்கொன்று கள்ளு
அறிவினி லறிந்தவர்க் கதுவுங்கள் ளிதுவுங் கள்ளே
ஒருதலை யுயர்ந்ததேதோ வொருகுலை தாழ்ந்த தேதோ
பறையனைப் பழிப்பதேதோ பாய்ச்சலூர் கிராமத்தாரே. 90

## பொய்யுரவு.

தந்தைதாய் நிஜமுமல்ல ஜனங்களு நிஜமுமல்ல
மைந்தரு நிஜமுமல்ல மனையவ ணிஜமுமல்ல
இந்தமெய் நிஜமுமல்ல வில்லற நிஜமுமல்ல
சுந்தர நாயகநாதர் துணையடி நிசம்பார் நெஞ்சே.

## மாய்கை.

நித்திரை வந்தபோது நினைவுதா னிருந்த தெங்கே
புத்திரர் தாமுமெங்கே புணர்ந்திடு மனைவி யெங்கே
பத்திர பூஷை யெங்கே பலதொழில் செய்வதெங்கே
சித்திர நாயக நாதர் செயல்தனை யறிவாய் நெஞ்சே. 91

## புல்லறிவு.

வஞ்சக நடைமரத்தில் வளர்வினை கொம்பி லேறிச்
சஞ்சல மனக்குரங்கு தாவியே யலைய நீதான்
பஞ்சபாதகங்கள் செய்து பாம்பின்வாய்த் தேரையானாய்
நஞ்சமு தருந்து நாகை நாதரை வணங்கு நெஞ்சே. 92

## அன்னதானம்.

கரிபரி யாயிரங்கள் கனத்தகோ தானம் பூமி
பரிவொடு ரசிதஞ்சொர்ன பாத்திரம் பண்பாமென்று
மிருகுல மொத்தகன்னி கோடிதா னிருந்திட்டாலு
மரிதிது வென்றேயன்ன தானமே யதிகமாகும்.

(இ-ள்)ஆயிரம் யானைகளையும்-ஆயிரங் குதிரைகளையும் வெள்ளிப்பாத்தி ரஞ் சொர்னப்பாத்திரங்கள் முதலிய விசித்திரமான கன்னிய ஸ்திரீகளிலே கோடி கன்னிகாதானஞ்செய்திட்டாலும்அன்னதானத் துக்கீடல்ல(எ-று)93

## மனமொவ்வாதவர்.

வேசியரும் நாயும் விதிநூல் வயித்தியரும்
பூசுரருங் கோழிகளும் பொன்னனையீர்—பேசிலொரு
காரணந் தானின்றிக் கண்டவுடனே பகையாங்
காரணந்தானப் பிறப்பே காண்.

(இ-ள்)விலைமாதர்களை விலைமாதர்களும்,நாய்களைநாய்களும்,வயித்தியரை வயித்தியரும்,பிராமணர்களை பிராமணர்களும், கோழிகளைக்கோழிகளுங்கண் டால் யாதொருகாரணமுமில்லாமல்பகையுண்டாவதுபோலவே. அற்பகவிவா ணருமப்படியேதான். யோசிக்குமிடத்துப் பிறப்பேகாரணமாயிருக்கிறது. 94

## மேன்மையானவை.

பொன்னுங் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமுஞ்
சின்னம்பட வருத்தஞ் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்று நலிந்தாலு முத்தமர்பால்
நற்குணமே தோன்று நயந்து.

(இ-ள்)பொன்னைச் சுட்டாலும், கரும்பை ஆலையாடினாலும் பாலைக்காய்ச்சி னாலும்,சந்தனத்தைத்தேய்த்தாலும்,அதனதன் குணங்கெடாது(அதுபோல்) வறுமை முதலியவற்றால் நல்லோர்மனம் வருந்தினாலும் அவர்களது நற்கு ணங் கெடாது(எ-று) 95

## உலகக்கேடு.

பெண்ணொருத்தி பேசில் பெரும்பூமி தானதிரும்
பெண்ணிருவர் பேசில்விழு வான்மீன்கள்—பெண்மூவர்
பேசி லலைகடலும் பேதைமையே பெண்பலர்தாம்
பேசிலுல கென்னாமோ பின்.

(இ-ள்) ஒருஸ்திரீபேசினால் பூமியதிரும் இரண்டு ஸ்திரீகள் பேசினால நட்சத்திரங்களுதிரும்-மூன்று ஸ்திரீகள் பேசினால் சமுத்திரஜலம் வற்றிப் போம்-பலஸ்திரீகள் பேசினால் உலகம் என்ன பாடுபடுமோ தெரியாது. 96

## நேசித்தல்.

பகைசேரு மெண்ணான்கு பற்கொண்டே நன்னா
வகைசேர் சுவையருந்து மாபோல்—தொகைசேர்
பகைவரிட மெய்யன்பு பாவித்தவராய்ச்
சுக முறுதல் நல்லோர் தொழில்.

(இ-ள்) பகையாகிய முப்பத்திரண்டு பற்களைக் கொண்டே நாவானது பல சுவைகளை யுண்டறியும், அதுபோல், நல்லோர்கள் பகைவரிடத்தில் அன் புள்ளதாகவே பாவித்து அவர்களால் சுகத்தையடைவார்கள் (எ-று.) 97

## சண்டாள வகுப்பினர்.

தாவ பட்சியில் சண்டாளி சாத்திய காக்கை நாற்கால்
மேவிய மிருகந்தன்னில் கழுதைசண்டாளி யென்னும்
யாவது சினந்தயோகி யவரில்சண்டாளி யென்பர்
பூவுலமாந்தர் தன்னில் பொருந்து தூஷண சண்டாளி.

(இ-ள்) பறக்கிற பட்சிகளில் காக்கை சண்டாளி, நாற்கால் மிருகங்களில் கழுதைசண்டாளி, சந்நியாசி முதலிய யோகிகளில் கோபமுடையவன் சண் டாளி. இல்லற வாசிகளான மனிதர்களில் பிறரை தூஷிக்கிறவனே சர்வ சண்டாளியாகையால் இவர்களின் முகத்தில் விழிக்கலாகாது (எ-று.) 98

## வலிமை யகற்றல்.

வான் குருவி யின்கூடு வல்லரக்குந் தொல்கறையான்
தேன் சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்கா
ணெல்லார்க்கு மொவ்வொன் றெளிது. 99

## கல்விக் கெல்லை யில்லை.

கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்
றுற்ற கலைமடந்தை யோதுகிருள்—மெத்த
வெறும்பந் தயங்கூற வேண்டாம் புலவீ
ரெறும்புந்தன் கையாலெண் சாண். 100

## புல்லர்க்கும் வல்லரடக்கம்.

கருங்காலிக் கட்டைக்கு நாணுக்கோ டாலி
யிருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நாணேற்ற
தீரிரவுந் துஞ்சாதென் கண். 101

## பொருளழிவு.

நம்ப னடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காங்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
கள்ளர்க்காந் தீக்காகுங் காண். 102

## அன்பில்லா வமுது.

காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
மாணொக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கே
னென்பெல்லாம் பற்றி யெரிகின்ற தையையோ
வன்பில்லா ளிட்ட வமுது. 103

## துரும்பாகு மெனல்.

போந்த வுதாரனுக்குப் பொன்றுரும்பு சூரனுக்குச்
சேர்ந்த மரணஞ் சிறுதுரும்பே—யாய்ந்த
வறிவோர்க்கு நாரி யருந்துரும்பா மில்லைத்
துறவோர்க்கு வேந்தன் றுரும்பு. 104

## சிறந்த செயல்கள்.

### குறள் வெண்பாக்கள்.

மதியாதார் முற்ற மதித்தொருகாற் சென்று, மிதியாமை கோடி
பெறும்—உண்ணீருண் ணீரென் றுபசரியார் தம்மனையி, லுண்
ணாமை கோடி பெறும்—கோடி கொடுத்துங் குடிப்பிறந்தார் தம்
மோடு, கூடுதல் கோடி பெறும்—கோடானு கோடி கொடுப்பி
னுந் தன்னுடைநாக் கோடாமை கோடி பெறும். 105

### நேரிசை யாசிரியப்பா.

கொடியது கேட்கி னெடியவெவ் வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிது இளமையில் வறுமை
அதனினுங் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்
அதனினுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினுங் கொடிது இன்புற வவர்கையி லுண்பது தானே. 106

### நிலமண்டில வாசிரியப்பா.

இனியது கேட்கிற் றனிநெடு வேலோய்
இனிது இனிது ஏகாந்த மினிது
அதனினு மினிது ஆதியைத் தொழுதல்
அதனினு மினிது அறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிது அறிவுள் ளோரைக்
கனவினு நனவினுங் காண்பது தானே. 107

### பெரியது.

பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு

நான்முகன் கரியமா லுந்தியில் வந்தோன்
கரிய மாலோ வலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி கையி லடக்கம்
குறுமுனி யோகல சத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ வரவினிக் கொருதலைப் பாரம்
அரவோ வுமையவள் சிறுவிரன் மோதிரம்
உமையோ விறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே. 108

## இதனோடு இது நீங்குமெனல்.

தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோஞ்
சேயோடு தான்பெற்ற செல்வம்போ— மாயவாழ்
வுற்றா ருடன்போ முடற்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம். 109

## மனவுறுதி யுண்டாகும்படி பாடியது.

### ஔவையார்.

இட்டமுட னென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ. 110

## உப்பை.

அத்தி முதலெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்த மகிழ்ந்தளிக்குந் தேசிகன்—முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
வற்பனோ வன்னா யரன். 111

### அதிகமான்.

கருப்பைக்குண் முட்டைக்குட் கல்லினுட்டே ரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்ய—னுருப்பெற்
றூட்டி வளர்க்கானோ வோகெடுவா யன்னெய்கேள்
வாட்ட முனக்கேன் மகிழ். 112

### உறுவை.

சண்டப்பைக் குள்ளுயிர்தன் றாயருந்தத் தானருந்து
மண்டத் துயிர்பிழைப்ப தாச்சரிய—மண்டி
யலைகின்ற வன்று யாருடைய வுண்மை
நிலைகண்டு நீயறிந்து நில். 113

### கபிலர்.

கண்ணுழையாக் காட்டிற் கருங்கற் றவளைக்கு
முண்ணும் படியறிந் தூட்டுமவர்—நண்ணு
நமக்கும் படியளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத் தொழிலென்ன தான். 114

### வள்ளியம்மை.

அன்னை வயிற்றி லருத்தி வளர்த்தவன்று
மின்னும் வளர்க்கானோ வென்றாயே - மின்னரவஞ்
சூடும் பெருமான் சுடுகாட்டி னின்றவினை
யாடும் பெருமா னவன். 115

### திருவள்ளுவர்.

எவ்வுயிருங் காப்பதற்கோ ரீசனுண்டோ வில்லையோ
வவ்வுயிரில் யானொருவ னல்லேனோ—வவ்வி
யருகுவது கொண்டிங் கலைவதேன் னன்னே
வருகுவது தானே வரும். 116

### கம்பர் சொல்லியது.

#### வெண்பா.

இந்நா ளிதுவினையு மென்றெழுத்துத் தானிருக்க
வென்னாலே யாவதொன்று மில்லையே—யுன்னாலே
வந்ததுதா னப்பா மகனே தவிர்ப்பவரார்
முந்தையினிற் செய்தவினையே. 117

## அதற்கு அம்பிகாபதி சொல்லியது.

இந்நா ளிதுவிளையு மென்றெழுத்துத் தானிருக்க
வென்னாலே யாவதொன்று மில்லையே—யென்னாலே
வந்ததுகா ணையா வரும்விதியை யார்தடுப்பா
ரெந்தைமக தேவர்செயலே. 118

## நல்வழி.

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை. 119

மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம். 120

நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்தில்
கொண்ட கருவழிக்குங் கொள்கைபோல்—ஒண்டொடீ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல்
மாதர்மேல் வைப்பார் மனம். 121

தேவர் குறளுந் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழு முனிமொழியும்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர். 122

கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன் வாயிற் சொல். 123

## வாக்குண்டாம்.

அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
எடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
உருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. 124

இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
இல்லாளு மில்லாளே யாமாயின்—இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும். 125

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க் கறங்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றங் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண். 126

மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னனுக்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. 127

## வெற்றி வேற்கை.

கல்விக்கழகு கசடற மொழிதல். 128
செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல். 129
வேதியர்க்கழகு வேதமுமொழுக்கமும். 130
மன்னவர்க்கழகு செங்கோன் முறைமை. 131
வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல் 132
உழவர்க்கழகிங் குழுதூண்விரும்பல். 133
மந்திரிக்கழகு வரும்பொரு ளுரைத்தல். 134
உண்டிக்கழகு விருந்தோடுண்டல். 135
பெண்டிர்க்கழகெதிர் பேசாதிருத்தல். 136
விலைமகட்கழகுதன் மேனிமினுக்குதல். 137
அறிவோர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல். 138
பெரியோரெல்லாம் பெரியருமல்லர். 139
சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர். 140

பெற்ரோரெல்லாம் பிள்ளைகளல்லர். 141
உற்ரோரெல்லா முறவினரல்லர். 142
கொண்டோரெல்லாம் பெண்டிருமல்லர். 143
சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம்
பெரியோராயிற் பொறுப்பது கடனே. 144
சிறியோர்பெரும்பிழை செய்தனராயின்
பெரியோரப்பிழை பொறுத்தலுமரிதே. 145
கல்லாவொருவன் குலநலம்பேசுதல்
நெல்லினுட்பிறந்த பதராகும்மே. 146
எக்குடிபிறப்பினும் யாவரேயாயினும்
அக்குடிகற்ரோரை மேல்வருகென்பர். 147
ஞானிக்கில்லை இன்பமுந்துன்பமும்.
நாளுங்கிழமையு நலிந்தோர்க்கில்லை. 148
குடைநிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர் 149
நடைமெலிந்தோரூர் நண்ணினுநண்ணுவர். 150
அறத்திடுபிச்சை கூவியிரப்போர்
அரசோடிருந்த சாளினுமாளுவர். 151
கொடுங்கோன்மன்னர் வாழுநாட்டில்
கடும்புலிவாழுங் காடுநன்றே. 152
காலையுமாலையு நான்மறையோதா
அந்தணரென்போ ரனைவரும்பதரே. 153
தன்னுயுதமுந் தன்கையிற்பொருளும்
பிறன்கையிற்கொடுக்கும் பேதையும்பதரே. 154
துணையோடல்லது நெடுவழிபோகேல். 155

## விவேக சிந்தாமணி.

வானர மழை தனி னனையத் தூக்கணங்
தானொரு நெறிசொலத் தாண்டிப் பியத்திடும்
ஞானமுங் கல்வியு நவின்ற நூல்களும்
ஈனருக் குரைத்திடி லிடறதாகுமே. 156

கற்புடைமாதர் கொங்கை கவரிமான் மயிரின் கற்றை
வெற்புறு வேங்கையின்ருேல் வீரன்கை வெய்யகூர்வேல்

தேடவுமோட்சமுந் தொல்லை—அதைத்
தேடும் வழியைத் தெளிவோருமில்லை. (பாபஞ்) 163

கள்ள வேடம் புனையாதே—பல
காக்கைப்போல் கத்திநீ யோடியலையாதே
கொள்ளை கொள்ளநினையாதே—நட்புக்
கொண்டு புரிந்து நீ கோண்முனையாதே. (பாபஞ்) 164

ஐந்துபேர் சூழ்ந்திடுங் காடு—இந்த
ஐவர்க்கு மைவ ரடைந்திடு நாடு
முந்தி வருந்திநீ தேடு—அந்த
மூலமறிந்திட லாமுத்தி வீடு. (பாபஞ்) 165

## சிவவாக்கியர் பாடல்.

### அக்ஷர நிலை.

ஆனவஞ் செழுத்துளே யண்டமு மகண்டமும்
ஆனவஞ் செழுத்துளே யாதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே யகாரமும் மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே யடங்கலாவ துற்றதே. 166

### சரியைவிலக்கல்.

ஓடியோடி யோடியோடி யுட்கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களுங் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடிகோடி கோடிகோடி யெண்ணிறந்த கோடியே. 167

### கிரியைவிலக்கல்.

நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லுமந்தர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ. 168

## யோகநிலை.

உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவை
கருத்தினா லிருத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்டருத்த நாதர்பாத மம்மைபாத முண்மையே. 169

## வேதநிலை.

வடிவுகண்டு கொண்டபெண்ணை மற்றொருவனத்தினால்
விடுவனோ வவளைப்பின்னம் வெட்டவேணு மென்பனே
நடுவன்வந் தழைத்தபோது நாறுமிந்த நல்லுடல்
சுடலைமட்டுங் கொண்டுபோய்த் தோட்டிகைக் கொடுப்பரே. 170

## ஞானநிலை.

என்னிலே யிருந்ததொன்றை யானறிந்த தில்லையே
என்னிலே யிருந்ததொன்றை யானறிந்து கொண்டபின்
என்னிலே யிருந்ததொன்றை யாவர்காண வல்லிரோ
என்னிலே யிருந்திருந்து யானுணர்ந்து கொண்டனே. 171

அந்திகால முச்சிமூன்று மாடுகின்ற தீர்த்தமும்
சந்திதர்ப் பணங்களுந் தபங்களுஞ் செபங்களும்
சிந்தைமேவு ஞானமுந் தினஞ்செபிக்கு மந்திரம்
எந்தைராம ராமராம ராமவென்னு நாமமே. 172

பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்க ளெத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்க ளெத்தனை
மிண்டராய்த் திரிந்தபோ திரைத்தநீர்க ளெத்தனை
மீளவுஞ் சிவாலயங்கள் சூழவந்த தெத்தனை
அண்டர்கோ னிருப்பிட மறிந்துணர்ந்த ஞானிகள்
கண்டகோயில் தெய்வமென்று கையெடுப்ப தில்லையே. 173

கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்புகா
உடைந்துபோன சங்கினோசை யுயிர்களு முடற்புகா
விரிந்தபூ உதிர்ந்தகாயு மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லையில்லை யில்லை யில்லையே. 174

தூமை தூமை யென்றுநீர் துவண்டலையு மேழைகாள்
தூமை யான பெண்ணிருக்க தூமை போன தெவ்விடம்
ஆமைபோல மூழ்கிவந் தனேகவேத மோதுநீர்
தூமையுந் திரண்டுருண்டு சொற்குருக்க ளானதே. 175

சொற்குருக்க ளானதுஞ் சோதிமேனி யானதும்
மெய்க்குருக்க லாயினும் வேணபூசை செய்கினும்
சற்குருக்க ளாயினுஞ் சாத்திரங்கள் சொல்லினும்
எக்குருக்க ளாயினுந் திரண்டுருண்ட தூமையே. 176

மாதமாதந் தூமைதான் மறைந்துபோன தூமைதான்
மாதமற்று நின்றலோ வளர்ந்து ரூப மானது
நாதமேது வேதமேது நற்குலங்க ளேதடா
வேதமோதும் வேதியா விளைந்தவாறும் பேசடா. 177

ஊறிநின்ற தூமையை யுறைந்துநின்ற ஜீவனை
வேறுபேசி மூடரே விளைந்தவாற தேதடா
நாறுகின்ற தூமையல்லோ நற்குலங்க ளாவன
சீறுகின்ற மூடரேயத் தூமைநின்ற கோலமே. 178

காலைமாலை நீரிலே முழுகுமந்த மூடர்காள்
காலை மாலை நீரிலே கிடந்ததேரை யென்பெறும்
காலமே யெழுந்திருந்து கண்கள்மூன்றி லொன்றையும்
மூலமே நினைந்திராகில் முத்திசித்தி யாகுமே. 179

மனத்தகத் தழுக்கறாத மௌனஞான யோகிகள்
வனத்தகத் திருக்கினு மனத்தகத் தழுக்கறார்
மனத்தகத் தழுக்கறுத்த மௌனஞான யோகிகள்
முலைத்தடத் திருக்கினும் பிறப்பறுத் திருப்பரே. 180

எங்கள்தேவ ருங்கள்தேவ ரென்றிரண்டு தேவரோ
இங்குமங்கு மாகிநின்ற வாதிமூர்த்தி யொன்றலோ
அங்குமிங்கு மாயிரண்ட னாதிமூர்த்தி யொன்றலோ
வங்கவாரஞ் சொன்னபேர்கள் வாய்புழுத்து மாள்வரே. 181

காணவேணு மென்றுநீர் கடல்மலைக ளேறுவீர்
ஆணவம தல்லவோ வறிவில்லாத மாந்தரே
வேணுமென்றவ் வீசர்பாத மெய்யுளே தரிப்பரேற்
றுணுவாக நின்றசிவன் றன்சிவம தாகுமே. 182

## பாம்பாட்டி சித்தர்பாடல்.

வைத்தைக் குழியிலே மண்ணையெடுத்தே
உதிரப்புனலிலே யுண்டை சேர்த்தே
வாய்த்தக் குயவனார் பண்ணும் பாண்டம்
வர கோட்டுக்கு மாகாதென் றாடாய் பாம்பே. 183

இருவர்மண் சேர்த்திட வொருவர் பண்ண
ஈரைந்து மாதமாய் வைத்த சூளை
அருமையா யிருக்கினு மந்த சூளை
அரைக்காசுக் காகாதென் றாடாய் பாம்பே. 184

பரியாசம் போலவே கடித்தபாம்பு
பலபேரறியவே மெத்த வீங்கி
பரியார மொருமாது பார்த்த போது
பையோடே கழன்றதென் றாடாய்பாம்பே. 185

மனமென்னுங் குதிரையை வாகனமாக்கி
மதியென்னுங் கடிவாளம் வாயிற் பூட்டிச்
சினமென்னுஞ் சீனிமேற் சிராவேறித்
தெளிவிடம் சாரிவிட் டாடாய் பாம்பே. 186

களிமண்ணினு லொருகப்பல் சேர்த்தே
கனமான பாய்மரங் காணநாட்டி
அளிபுலந்தன்னையே சுக்கா னாக்கி
அறிவென்னு மாதாரச் சினி தூக்கி
வெளியென்னும் வட்டத்தே யுள்ளடக்கி
வேதாந்த கடலினை வெல்ல வோட்டி

தெளிவுறுஞானியா ரோட்டுங் கப்பல்
சீர்பாதஞ் சேர்ந்ததென் றூடாய்பாம்பே. 187

## ஞானக்கும்மி.

தேகமான மல மாண்ட மதிற்
சிற்பனம் வந்திடு முற்பனத்தை
யோகமெனுந் தமிழ்பாடலுக்கு மன
முவந்து கேளடி ஞானப்பெண்ணே 188

இத்தனை பேர்க ளிருந்தாலு மதி
லிரண்டே பேர்கள் சமுசாரி
அத்தனை பேரையுந் தள்ளிவைத்தாற் பயி
ராரிடு வாரடி ஞானப் பெண்ணே. 189

எண்சாணீள மொருவீடா மதி
லெட்டொரு பீற்றல் மலக்கூடாம்
பஞ்சாயக்காரர்களைந்து பேருந் தெய்வப்
பகியி தென்கிறார் ஞானப்பெண்ணே 190

கட்டுப்படாதந்த வச்சுமட்ட மது
காலோ பன்னிரண்டாகையினல்
எட்டுக் கயிற்றினல் கட்டிக் கொண்டா லிது
மட்டுப் படுமடி ஞானப் பெண்ணே 191

சூட்சக்குதிரை யடங்காது சுழிக்
கோட்டுக்குட் செல்ல முடியாது
மூச்சுக் காயிரங் காதவழி மிக
முந்தி நடக்குதாம் ஞானப்பெண்ணே. 192

குதிரை கட்டிய லாயத்திலே மனக்
கோட்டையிலே சந்தைப் பேட்டையிலே
எதிரி தான்வந்து தட்டுகிறானதை
யேதென்று கேளடி ஞானப் பெண்ணே. 193

பாம்பிருக்குது புற்றுக்குள்ளே ஐக
பந்த மிருக்குது நெஞ்சுக்குள்ளே
விம்பை யடக்கி யுயர்ந்தாக்காற் பரி
வேடிக்கை பார்க்கலாம் ஞானப் பெண்ணே. 194

பித்துப்பிடித்த மனக்குரங்கு வெறிப்
பேயும் பிடித்துக்கொண்டாட்ட மிட்டால்
அத்தை யடக்க மருந்து செய்தாற் பரி
யன்று நடத்தலாம் ஞானப்பெண்ணே. 195

வாததர்க்கத்தினா லென்னப்பலன் மனம்
வாதித்து ஜெயித்தா லென்னப்பலன்
சோதித்து நின்றவர்க் கொன்றாரு மதைச்
சொன்னால் சஞ்சலம் ஞானப் பெண்ணே 196

எத்தனை பேர்களோ கூடுவா ரதைப்
பேசவும் பணத்தை நாடிடு வார்
பித்தனை போலும் பெனத்திடுவா ருண்மை
பேசுவர்க் கூடாரே ஞானப் பெணணே. 197

தாடிவளர்த்துச் சடைவளர்த்து நல்ல
சந்நியாசி யென்றொரு வேடமிட்டு
ஒடித்திரிந்த புலையாட்டை யிங்கே
யொப்புவ தாரடி ஞானப்பெண்ணே. 198

பீடமிருப்பது மையத்திலே பலி
பீடமிருப்பதுங் துய்யத்திலே
மாடமிருந்தசி வாலயத்தில்மணி
விளக்கிருக்குது ஞானப்பெண்ணே. 199

கண்ணாலே மனக்கண்ணாலே யதைக்
கண்டாலேவழி யுண்டாகும்
பெண்ணாசை தனை யநிக்காமல் வழி
பேணிப்பாரடி ஞானப்பெண்ணே. 200

## வாலைக் கும்மி.

ஊத்தைச் சடலமென் றெண்ணாதே இது
உப்பிட்ட பாண்டமென் றெண்ணாதே
பார்த்த பேருக்கு ஊத்தையில்லை இதைப்
பகர்ந்து பாரடி வாலைப்பெண்ணே. 201

வகார மானது ஓசையாச்சு அந்த
மகார மானது கெர்ப்ப மாச்சு
சிகாரமானது மாய்கையாச்சு இதைத்
தெளிந்து பாரடி வாலைப் பெண்ணே. 202

மண்ணு மில்லாமலே விண்ணுமில்லை கொஞ்சம்
வாசமில்லாமலே பூவுமில்லை
பெண்ணு மில்லாமலே யாணு மில்லை இதைப்
பேணிப் பாரடி வாலைப்பெண்ணே. 203

எல்லா மறிந்தவ ரென்று சொல்லி இந்த
பூமியில் முழு ஞானி யென்று
உல்லாசமாக வயிர்பிழைக்க விவர்
ஓடித்திரியுறார் வாலைப் பெண்ணே. 204

## மானிட கும்மி.

ஆகம சாஸ்திர நூலைப்படி யதின்
அடக்கப் பொருளைக் கண்டுப்பிடி
மோகத்தை விளக்கும் பொல்லாத நூல்களை
மூலையிற் றள்ளுவாய் மானிடமே. 205

தந்திர மாகநாம் தேடும் பணங்களில்
சண்டாளி கையினிற் சிக்கிக் கொண்டால்
அந்திர தேவதை வந்து முளைந்தாலு
மள்ளித் தெளிக்காளே மானிடமே. 206

பாடுபட்டு தினஞ் சேர்த்தப் பணமெல்லாம்
பாதகிகையினிற் சிக்கிக் கொண்டால்

கூடுமொழி தப்பி போடா வாடா வென்று
    கூசாமற் பேசுவாள் மானிடமே. 207
காசெல்லா மழிந்து போனாலே யுன்னைக்
    கண்டாலு மவள் பேசாளே
மோசக்காரி யாசை வையாமல் நித்திய
    மூத்தோர் சொற் கேட்பாயே மானிடமே. 208

## அழுகணிசித்தர் பாடல்.

ஊத்தைச் சடலமடி யென்கண்ணே உப்பிருந்த பாண்டமடி
மாற்றிப்பிறக்க மருந்தெனக்குக் கிட்டவில்லை
மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்
ஊத்தைச் சடலம்விட்டு என்கண்ணம்மா உன்பாதஞ்சேரேனோ. [209
பட்டணத்தை யாளுகின்ற பஞ்சவர்கள் ராஜாக்கள்
விட்டும் பிரியாமல் வீரியங்கள் தாம்பேசி, விட்டுப்பிரிந்தவரே
வேறுபடுங்காலம், பட்டணமுந் தான்பரிபோய்
என்கண்ணம்மா படைமன்னர் மாண்ட தென்ன. 210

## குதம்பைசித்தர் பாடல்.

மெய்ப்பொருள் கண்டு விளங்குமெஞ் ஞானிக்குக்
கற்பங்க ளேதுக்கடி—குதம்பாய் கற்பங்க ளேதுக்கடி. 211
வஞ்சக மற்று வழிதனைக் கண்டோர்க்கு சஞ்சல
மேதுக்கடி—குதம்பாய் சஞ்சல மேதுக்கடி. 212
அல்லலை நீக்கி யறிவோ டிருப்பார்க்குப் பல்லாக்
கேதுக்கடி—குதம்பாய் பல்லாக் கேதுக்கடி. 213
தந்திரமான தலந்தனி லிற்போர்க்கு மந்திர மேதுக்கடி
குதம்பாய் மந்திர மேதுக்கடி. 214
சித்திர கூத்தைத் தினந்தினங் காண்போர்க்குப்
பத்திர மேதுக்கடி—குதம்பாய் பத்திரமேதுக்கடி. 215
உச்சிக்கு மேற்சென் றுயர்வெளி கண்டோர்க்கு
இச்சிப்பிங் கேதுக்கடி—குதம்பாய் இச்சிப்பிங் கேதுக்கடி. 216

தன்னையறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்குப் பின்னுசை
யேதுக்கடி—குதம்பாய் பின்னுசையேதுக்கடி. 217

வெண்காய முண்டு மிளகுண்டு சுக்குண்டு
உண்காய மேதுக்கடி—குதம்பாய் உண்காய மேதுக்கடி. 218

## இடைக்காட்டுச் சித்தர்பாடல்.

தாந்திமித்திமி தந்தக்கோனாரே தீந்திமித்திமி திந்தக்கோனாரே
அந்தக்கோனாரு மிந்தக்கோனாரும் பரமானந்தக் கோனாரே
ஆனந்தக் கோனாரே யரு
ளானந்தக் கோனாரே. 219

நாற்ற நரம்பினால் பின்ன கூடா மிது
நாளோ முன்னூரி லான கூடு
ஊற்றுள்ள கூடக்கு வொன்பது வாசல்க
ளூழிய ரைந்துபேர் கோனாரே. 220

நீரும் நெருப்புமே யொற்ற கூடா மதில்
நீராழி மாளிகைப் பெற்ற கூடாம்
நீருள்ள மாளியில் கூவென்று கத்தர
நிலையில்லா பட்சி வசிக்குங் கூடாம். 221

கன்னி வலைக்குள்ளுஞ் சிக்காது அது
காவலர் கைக்குள்ளும் நிற்காது
பின்னற் கயிற்றினால் கட்டுண்ட பட்சிக்கு
ஊரில்லை பேரில்லைக் கோனாரே. 222

சீழும் மலத்திற் சிறந்த கூடா மதிற்
சிட்டென்ற பட்சி யுலாவுங் கூடாம்
பாழு மலக்கூட்டை போஷிக்கவே தினம்
கூழுக் கலைகுரார் கோனாரே. 223

உதிரப்பாலைக் கொண்டு சேர்கூட்டி மன
மொருமித் திருவரும் வீடுகட்டி

சதிரக்கல் பூட்டியுஞ் சாந்தனைக் கூட்டியுஞ்
சாக்கடை யிடென்னார் கோனாரே. 224

ஒன்பது கட்டுள்ள மாளிகையா மதி
லொருமித் திருக்குரார் மோசக் கார்கள்
ஒன்பது கட்டுக்குங் காவற்காரா ரென்றுக்
கண்டுத் தியங்குரார் கோனாரே. 225

எட்டொரு வழியுள்ள தோட்டத்திலே சுற்றி
யோடி யுலாவுவோ ரைந்து பேராம்
ஒற்றொரு பயிர் செய்யுந் தோட்டக்கார்க ளென்னை
வாட்டி வதைக்குரார் கோனாரே. 226

கொல்லைத்திருத்த வொருகால மனத்
தொல்லைத்திருத்த விருகாலம்
கல்லைத் திருந்தவோ முக்கால மனக்
கல்லைத் திருத்துவ தெக்காலம். 227

ஆடுகிடக்குது மைந்தைக்குள்ளே வைந்து
குட்டிக்கிடக்குது கூண்டுக்குள்ளே
கூடுக்குள் மேய்கிற குட்டிக ளென்னையு
மெட்டியு முட்டுது கோனாரே. 228

வெடிமரத்தடியினி லைந்தாட்டை மேய்த்தாலெ
வருவாரும் போவாரும் பால்தயிரு கேட்பார்
முடியாது முடியாது வைந்தாட்டை மேய்க்கவு
மூத்தக் கோனா ரென்னை மேய்க்கச் சொன்னாரே.(தாநதிமி) 229

## ஆத்திசூடி—குறளுதாரணத்துடன்.

எண்ணெழுத் திகழேல். 230

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. 231

கண்டொன்று சொல்லேல். 232

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 233

நன்றி மறவேல். 234

நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. 235

வஞ்சகம் பேசேல். 236

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும். 237

இளமையிற் கல். 238

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வுபடும். 239

பொருடனைப் போற்றிவாழ். 240

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு. 241

## கொன்றை வேந்தன்—குறளுதாரணத்துடன்.

எண்ணு மெழுத்துங் கண்ணெனத்தகும். 242

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிற்கு. 243

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர். 244

சூதும்வாதும் வேதனை செய்யும். 245

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன்றில். 246

தொழுதூண்சுவையி னுழுதூணினிது. 247

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல்பவர். 248

நோன்பென்பது கொன்றுதின்னாமை. 250

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றி
னுயிர் செகுத் துண்ணாமை நன்று. 251

புலையுங் கொலையுங் களவுந் தவிர். 252

அரு ளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். 253

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். 254

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூ னுண்பா
னெங்ஙன மாளு மருள். 255

## தனிக்குறள்.

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையாரில். 256

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. 257

துறந்தவர்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை. 258

## அருணகிரியந்தாதி.

காயநெகிழாமுன் கண்களிருளாமுன்
வாயிலுள்ளபல்லும் வழுவாமுன்—காயம்பார்த்
தேடிநமன் வாராமுன் னுள்ளமே சோணகிரி
நாடிநம வென்றே நட. 259

## பட்டினத்துப்பிள்ளையார் பாடல்.

காதென்று மூக்கென்று கண்ணென்றுகாட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை மறலிவிட்ட
தூதென்றெண்ணாமற் சுகமென்று நாடுமித் துர்ப்புத்தியை
ஏதென் றெடுத்துரைப் பேனிறை வாகச்சி யேகம்பனே. 260

ஓயாமற் பொய்சொல்வர் நல்லோரை நிந்திப்ப ருற்றுப்பெற்ற
தாயாரை வைவர் சதியாயி ரஞ்செய்வர் சாத்திரங்க
ளாயார் பிறர்க்குப கார்ஞ்செய் யார்தமை யண்டினர்க் கொன்
றீயா ரிருந்தென்ன போயென்ன காண்கச்சி யேகம்பனே. 261

ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோற்றிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே
யேற்றத் திரிந்துவிட் டேனிறை வாகச்சி யேகம்பனே. 262

முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்லாற் பொன்னி னம்பலவ
ரடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே. 263

ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப் பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே. 264

## திருவேகம்ப விருத்தம்.

அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
வப்பனெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னை யெத்தனை யெத்தனை சென்மமோ
மூட னாயடி யேனு மறிந்திலே
னின்ன மெத்தனை யெத்தனை சென்மமோ
வென்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே. 265

## திருக்கழுக் குன்றம்.

காடோ செடியோ கடற்புறமோ கனமே மிகுந்த
நாடோ நகரோ நகர்நடு வோநல மேமிகுந்த
வீடோ புறந்திண்ணையோ தமியேனுடல் வீழுமிடம்
நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணைநின் பதமே. 266

## திருக்காளத்தி.

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடை சுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடி யாடி முடிந்தபின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தரு கேயினிச் சாம்பிணங்கள்
கத்துங் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே. 267

## பொது.

நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்ம
லாட்டமென் றேயிரு பொல்லா வுடலை யடர்ந்தசந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீ
ரோட்டமென் றேயிரு நெஞ்சே யுனக்குப தேசமிதே. 268

எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கென்னு மிந்த மண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கென்னுந் தான்புசிக்க
நரியெனக் கென்னும் புன்னாயெனக் கென்னுமிந் நாறுடலைப்
பிரியமுடன்வளர்த் தேனித னாலென்ன பேறெனக்கே. 269

பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே. 270

எட்டுத் திசையும் பதினாறு கோணமு மெங்குமொன்றாய்
முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை மூடரெல்லாங்
கட்டிச் சுருட்டித்தங் கக்கத்தில் வைப்பர் கருத்தில்வையார்
பட்டப் பகலை யிரவென்று கூறிடும் பாதகரே. 271

## வெண்பா.

காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு. 272

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்—பெருக்க
வழைத்தாலும் போகே னரனேயென் றேக
மிளைத்தாலும் போகே னினி. 273

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியிற்
பாவியென்று நாமம் படையாதே—மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி. 274

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
யொருத்தருக்குந் தீங்கினைநீ யுன்னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய் நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான். 275

## பட்டினத்துப் பிள்ளையார்
## ஒரு கலியாணத்தில் சேஷையிடும்போது பாடிய திருவிருத்தம்.

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந் தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடி
பூப்பிளக்கப் பொய்யுரைத்துப் புற்றீசற் போலப்
புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வழியறியீர் கைவிடவு மாட்டீர்
கவர்பிளந்த மரத்துளையிற் கானுழைத்துக் கொண்டே
ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர் கிடந்துழல வகப்பட்டீரே. 276

## தாயுமானசுவாமிக ளருளிச்செய்த திருப்பாடல்கள்.

### திருவருள்விலாசப் பரசிவவணக்கம்.

அங்கிங் கெனாதபடி யெங்கும்ப்ர காசமா யானந்த பூர்த்தியாகி, அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே யகிலாண்ட கோடியெல்லாம், தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த் தழைத்ததெது மனவாக்கினில், தட்டாம னின்றதெது சமயகோ டிகளெலாந் தந்தெய்வ மெந்தெய்வமென், றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது வெங்கணும் பெருவழக்கா, யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா யென்றைக்கு முள்ளதெதுமேல், கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது கருத்திற்கிசைந்ததது வே, கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங் கருதியஞ் சலிசெய்குவாம். 277

## பரிபூரணானந்தம்.

அந்தகா ரத்தையோ ரகமாக்கி மின்போலென் னறிவைச் சுருக்கினவரார், அவ்வறிவு தானுமே பற்றினது பற்றா யழுந்தவுந் தலைமீதிலே, சொந்தமா யெழுதப்படித்ததார் மெய்ஞ்ஞான சுகநிஷ்டை சேராமலே, சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு தூங்கவைத் தவரார்கொலோ, தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சந் தனைத்தந்த தெனதாசையோ, தன்னையே நோவனோ பிறரையே நோவனோ தற்கால மதைநோவனோ, பந்தமா னதுதந்த வினையையே நோவனோ பரமார்த்த மேதுமறியேன், பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூர ணானந்தமே. 278

ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல் லாங்கட்டி யாளினுங் கடன்மீதிலே, யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக வம்பொன்மிக வைத்தபேரும், நேசித்து ரசவாத வித்தைக்கலைந்திடுவர் நெடுநா ளிருந்தபேரும், நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி நெஞ்சுபுண் ணாவரெல்லாம், யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும் உறங்குவது மாகமுடியும், உள்ளதேபோதுநா னானெனக் குளறியே யொன்றைவிட் டொன்றுபற்றிப், பாசக்கடற்குளே வீழாமல் மனதற்ற பரிசுத்த நிலையையருள்வாய், பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே.279

## ஆனந்தமானபரம்.

மாறுபடு தர்க்கந் தொடுக்கவறி வார்சாண் வயிற்றின் பொருட்டதாக, பண்டலமும் விண்டலமு மொன்றாகி மனதுழல மாலாகி நிற்கவறிவார், வேறுபடு வேடங்கள் கொள்ளவறிவாரொன் றைமொணமொணென் றகம்வேறதாம், வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோன் மெய்ந்நூல் விரிக்க வறிவார், சீறுபுலி போற்சீறி மூச்சைப் பிடித்துவிழி செக்கச் சிவக்கவறிவார், திரமென்று தங்கள் மதத்தையே தாமதச் செய்கைகொடு முளறவறிவார், அறுசம யங்கடோறும் வேறுவே றாகிவிளை யாடுமுனை யாவரறிவார், அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி யானந்த மான பரமே 280

## சித்தர்கணம்.

கல்லாத பேர்களே நல்லவர்க ளல்லவர்கள் கற்றுமறி வில்லாதவென், கர்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகேன் கைவல்ய ஞானநீதி, நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று நாட்டுவேன் கர்மமொருவன், நாட்டினு லோபழய ஞானமுக் கியமென்று நவிலுவேன் வட மொழியிலே, வல்லானொருத்தன்வர வுந்த்ரா விடத்திலேவந்ததா விவகரிப்பேன், வல்லதமிழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன், வெல்லாம லெவரையு மருட்டிவிட வகைவந்த வித்தையென் முத்திதருமோ, வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற வித்தகச் சித்தர்கணமே. **281**

## சச்சிதானந்த சிவம்.

இனியேது மெமக்குனருள் வருமோ வெனக்கருதி யேங்குதே நெஞ்சமையோ, இன்றைக்கிருந்தாரை நாளைக் கிருப்பரென்றெண்ணவோ திடமில்லையே, அனியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு மந்தகற் காளாகவோ, ஆடித்திரிந்துநான் கற்றதுங் கேட்டது மவலமாய் போதனன்றோ, கனியேனும்வறிய செங் காயேனு முதிர்சருகு கந்தமூ லங்களேனும், கனல்வாதை வந்தெய்தினள்ளிப் புசித்துநான் கண்மூடி மௌனியாகித் தனியே யிருப்பதற்கெண்ணினே னெண்ணமிது சாமிநீ யறியாததோ, சர்வபரிபூரண வகண்டதத் துவமான சச்சிதா னந்தசிவமே. **282**

## தேஜோமயானந்தம்.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங் கரடிவெம் புலிவாயையும், கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங் கட்செவி யெடுத்தாட்டலாம், வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோகத்தையும் வேதித்து விற்றுண்ணலாம், வேறொருவர் காணாமலுலகத் துலாவலாம் விண்ணவரை யேவல் கொளலாம், சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு சரீரத்தினும் புகதலாம், சலமே னடக்கலாங் கனன்மே லிருக்கலாந் தன்னிகரில் சித்தி

பெறலாம், சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது சத்தாகியென், சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே தேசோ மயானந்தமே. 283

## மலைவளர் காதலி.

கெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே சிற்றிடையிலே நடையிலே, நேரொத்த விழியிலே பாலொத்த மொழியிலே சிறுபிறை நுதற்கீற்றிலே, பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த பொடியிலே யடியிலேமேற், பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே புந்திதனை நுழையவிட்டு, நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே நின்னடியர் கூட்டத்திலே, நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான நேயத்திலே யுனிருதாள், மட்டிலே மனதுசெல நினைதந்தருள்வையோ வளமருவு தேவையரசே, வரராஜ னுக்கிருகண் மணியாயுதித்த மலை வளர்காதலிப்பெணுமையே. 284

## வண்ணம்.

வயதும் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று வரலுஞ் செயலழிந்து விந்தையாகி, அனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சடைகளின்று மயிருங் களைகளின்று சரியென காடி, மனையின் புறமிருந்து மனமுங் குலைகுலைந்து கலகஞ் செயவிருண்ட யமன் வரும் வேளை ஏதுன்னை பழி காரணமே. 285

## பராபரக்கண்ணி.

கண்ணே கருத்தே யென்கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே யானந்த வெள்ளமே பராபரமே. 286

பார்த்தவிட மெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு
வார்த்தைசொல்வந்த குருவே பராபரமே. 287

பாராமே யென்னைப் புகல் பார்த்தோருநா ளென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே. 288

ஓயாதோ வென்கவலை யுள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே. 289

ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங்கனலில் வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே. 290

கடலமுதே தேனே யென்கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே. 291

உள்ளமறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே. 292

எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழைநெஞ்சம்
புண்ணாகச்செய்த தினிப்போதும் பராபரமே. 293

ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே. 294

கொல்லா விரத மொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே. 295

நித்திரையிற் செத்தபிண மேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே. 296

ஆயிரஞ் சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே. 297

சோற்றுத்துருத்திச் சுமைசுமக்கக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே. 298

புரந்தோர் தந்தேசமென்பார் பூமியைப் போராடி
யிறந்தோருந் தம்மதென்பா ரென்னே பராபரமே. 299

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தை
துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே. 300

## பைங்கிளிக் கண்ணி.

ஆவிக் குளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே. 301

## எந்நாட்கண்ணி.

அதியந்தங் காட்டாத கண்டிதமாய் நின்றுணர்ந்தும்
போதவடிவா மடியைப் போற்றுநா ளெந்நாளோ. 302

## யாக்கையைப் பழித்தல்.

காக்கைநரி செந்நாய்கழு கொருநாள் கூடியுண்டு
தேக்குவிருந்தா முடலைச்சீ யென்ப தெந்நாளோ. 303

## மாதரைப்பழித்தல்.

மெய்விசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளான்மறைத்துப்
பொய்விசும் வாயார் புலையொழிவ தெந்நாளோ. 304

## பொருளியல்பு.

கைவிளக்கின் பின்னே போய்க் காண்பார் போன்
மெய்ஞ்ஞான—மெய்விளக்கின் பின்னேபோய்
மெய்காண்ப தெந்நாளோ. 305

## குணங்குடி
## மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்.
## தன்னிரியலினாநந்தம்.

ஐயோ வெள்ளப்போது மாப்பெரும் பாவியிவ் வுலகத்தி லெங்கு மில்லையே, அநியாய மநியாய மென்பெரும் பாதகம தார் பாலெடுத்தோதுவேன், மையான கண்ணியர் வலைக்குள் ளகப் பட்ட மாபாவி நிபாவியான், மகுபூபு சுபுகானி யானவுமை நாடாத மடமைக்குடி கொண்டபாவி, பொய்யான வாழ்வதனை மெ ய்யாக நம்பியுன் பொன்னடி மறந்தபாவி, பொல்லார்களைச்சே

யல்லாது நல்லோர் புறக்கணித் திட்ட பாவி, நையுமோர் பொய்யு லக ஞகியே யுமதடிமை நாயினுங் கடையாவனே, நற்குணங் குடி கொண்ட பாத்துஷா வானகுரு நாதன் முகியித் தீனே. 306

## ஆசிரிய விருத்தம்.

அருள்பொழியு ஞானவா னந்தநட னம்புரிந் தாடிவருவார் கள் கோடி, அட்டாங்க யோகநிட் டானுபூ தியர்களே யாவற்ற கோடி கோடி, நரர்தொழுந் தவராஜ சிங்கங்கள் கோடியெந் நாளுமுள் ளோர்கள் கோடி, நாசச் சரீரத்தை நேசித்த பாசத் தை நாசமாக்கினருங் கோடி, சிரம்விரித் தவர்கோடி கரம் விரித்தவர்கோடி சினமறுத் தவர்கள் கோடி, தேவரீர் சேடரடி யேனுமுமை நம்பினேன் றீட்சைதந் தாளுதற்கே, மருவுற்ற மணி மகுட முள்ளநீர் பின்றொடர வள்ளலிற சூல்வருகவே, வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண் மணியே முகியித் தீனே.

நடனமிடு வாசிதனி லேறிவரு வார்கோடி நாடாளு மன்னர் கோடி,நாதாந்த மூர்த்தியர்கள் கோடிநன் மௌனகுரு நாதாக் கள் கோடி கோடி, திடஞான வைராக்ய வான்கள்பல கோடிநற் றிவ்யகுண வான்கள் கோடி, சிந்தையற நீக்குதிற மிக்கவொரு மிக்குநிலை சென்றநிலை யோர்கள் கோடி, செடிகாடு தனினுறைந் திலைசருகு பக்ஷணஞ் செய்தலைந் தோர்கள் கோடி, தேவரீர் சேட ரடியேனுமுமை நம்பினேன் றீட்சைதந் தாளு தற்கே, மடலவிழ் மலர்ப்பாத முள்ளநீர் பின்றொடர வள்ளலிற சூல்வருகவே, வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண் மணியே முகி யித் தீனே. 308

பொன்னாசை பெண்ணாசை மண்ணாசை மண்ணன பூரண ரந்தர் கோடி, புவிராஜர் கோடிமெய்த் தவராஜர் கோடிநற் புனி தகவி ராஜர்கோடி, மென்னிமுட்டக்கண்ட மட்டுமெருள் வாரியில் வீழ்ந்து மூழ்குவர்கள் கோடி, வேதவே தாந்திகளு மொருகோடி மெய்ஞ்ஞான வீடடைந் தோர்கள் கோடி, சின்னவெளி யொத் தவே ழைகளநந் தங்கோடி சின்ன வெளிமேலேழை கோடி, தேவ ரீர் சேடரடி யேனுமுமை நம்பினேன் றீட்சைதந் தாளு தற்கே

வண்ணமணி மலர்மாலை யுள்ளநீர் பின்றொடர வள்ளலிற சூல்வரு கலை, வளருபரு வனிறைகுணா குடிவாழு மென்னிருகண் மணி யே முகிழித்திடனே. 309

## கட்டளைக் கலித்துறை.

நாடு நகருண்டு நல்லோர் களுமுண்டு நாதனுமுண்
டோடு மெனக்குண்டென் றெண்ணியுன் கையி லுடல்பசித்தாற்
போடென்று கொண்ட கவளத்தைவாங்கிப் புசித்துக்கொண்டு
பாடுங் குணங்குடி வாழ்ந்திட வேபர மானந்தமே. 310

## ஸ்திரிகளுக்கு இந்திரியநிலை.

பெருவிரல் பெருங்கால்கள் கரணடி முழந்தாள் பெருங் குய்ய புந்தி மார்பு, பெருங்கொங்கை கைமூல கண்டங்க பாலம் வாய் பேடைகண் ணெற்றி யுச்சி—மருவுமூ வைந்துதா னத்தினி லிடப்புறம் வளர்பிறை தன்னிலாகும், வலப்புறந் தேய்பிறை தன்னிலே தாழ்வதாம் வலதுபாதம் வரையிலு—மருளுமுப் பதுதா னமும் போக நீக்கிற்கு மமுதினுக் கேழாம்பட, மதிவிட மிருக்குமா மன்றுபோ கத்தொழி லுறுவளவு மாகாதெனக்—கருதி னோர் பதனமா லதனிலே கொக்கோகர் தற்பக விராசமேவுங், கங் கைபுனை யீசனை மங்கைபகிழ் நேசனை கயிலையங் கிரிவாசனே.

## போகிக்கு நாள்.

அரிவையர்கள் பூப்புநா ளன்றுமுத லிரெட்ட தானநாள் வரைதன்னிலு, மடைவாக வேகரு தரிக்குநா ளதிலுன்கி லாஞ் சிதக் கல்விபாலும்—பொருந்துநா ளைத்தினிற் சோரனு மாறினிற் பொருந்தவிசி யேயுமாந் தினம். பிரபல தயாபர னெட்டதினின் மேவழுவும் பிரிதனவா மென்பதில்—அரியபத் தாந்தினங் காமி யாயுதிமென்றி றதிநட்ட னிராரினி, லருமைமிகு பண்டிதன் பதின்மூன்று மேறுமிரே னைபதி முன்கி மீனன்—கருதித்தல் பதினைந்தி லிரெட்டிய்யோகியாக் கற்பக விராசமேவும், கங்கை புனைமீசனை மங்கைபகிழ் நேசனை கயிலையங்கிரிவாசனே. 312

## மதன நூல்.

### போகிக் குதவா நாள்.

திங்கள்நாள் முன்னுள் பின்னுள் ஜென்மநாள் யேகாதசி, மங்கையர் மூன்றுநாளும் வளர்பிறை யுதித்தநாளும், பொங்கிய அமாவாசையிற் பூவையரைப் புணர்வாராகில், அங்கங் குலைந்து செல்வமழிந் தாயுளும் பழுதுண் டாமே. 313

### அந்தந்தவினத்தி லுயர்ந்தவை.

மலைகளின் மகாமேரு மாதத்தில் வைகாசி வாரத்தி லிந்து வாரம், மலர்களிற் கமலமலர் நகரிதனிலே கச்சி மரமதிற் † சந்த்ரதிலகம்—பலபூத மதில்வாயு வருபுனலி லேகங்கை பசுவினிற் காமதேனு, பாரிபுகழ் பூமியிற் காஷ்மீர கண்டநற் பறவையினில் ‡ வைனதேயன்—இலகுமணி யிற்பதும ராகமணி மேன்மைதிக ழிருடிகளி லேவசிட்டன், எழுகடலி லேதிருப் பாலுததி சங்கீத மிசைவீணை யினிளுரதன்—கலைதமி ழகத்தியன் கற்பினிலருந்ததி காசினியி லுயர்வல்லவோ, கஞ்சனிகர் நற்குச ரஞ்சலி செய் மெய்த்தேச கஞ்சகிரி சித்தேசனே. 314

† சந்த்ரதிலகம்—சந்தனமரம். ‡ வைனதேயன்—கருடன்.

### ஞானத் தெளிவு—விருத்தம்.

மண்டலத்தில் குருக்களென்று பேரும்பெற்று, மகத்தான துளிதமு மணிந்துகொண்டு—குண்டலங்கள் செவியிலிட்டுக் குல்லாசாத்தி, கோகரணங் கெசகரண மிரண்டுங் கற்று—தெண்டிரையிற் பலவிதமாய்ப் பொய்கள் சொல்லி, சிஷருக்கு முபதேசந் தெளியச் சொல்லார்—ஒன்றுமில்லை யவர்கள் கையில் வித்தை யாச்சு, உள்ளவர்த்த மானமிதை யுரைசெய்வேனே. 315

நீரில்முழுகும்போது பொருள்மேலாசை, நிலையான கரையில் வந்தால் நிலமேலாசை—கூர்ந்துநெற்றி தனில்வெண்ணீறணியும்போது,குறிப்பான மக்கள்பெண்டீர்சுற்றத்தாசை—ஊர்

